உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம!

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்



தொகுதி 22 | தாது௵ பங்குனிமீ ௧௨ | 1937௵ மார்ச்சுமீ 14௳ | பகுதி 9

## கடவுள் வணக்கம்

எத்தனை பிறப்போ எத்தனை யிறப்போ
எளியனேற்(கு) இதுவரை யமைத்தது
அத்தனை யெல்லாம் அறிந்தநீ அறிவை;
அறிவிலி அறிகிலேன் அந்தோ!
சித்தமும வாக்குந் தேகமு(ம்) நினைவே
சென்மமும் இனியெ(ன்)றல் ஆற்று
வைத்திடு இங்கு என்னை நின்னடிக் குடியா
மறைமுடி யிருந்தவான் பொருளே. (1)

வான்பொரு ளாகி எஙகு(ம்) இருப்பு
வந்துஎனைக் கொடுத்துநீ யாகாது
ஏன்பொருள் போலக் கிடக்கின்றேன் முன்னை
இருவினை வாதனை யன்றோ!
தேன்பொரு ளான அமிர்தமே நின்னைச்
சிந்தையிற் பாவனை செய்யும்
நான்பொரு ளானேன் நலலநல் அரசே
நான இறந் திருப்பது நாட்டம். (2)

இன்பமய மாய்உலக மெல்லாம் பிழைப்பதற்குஉன்
அன்புநிலை என்பார் அதுவு ம்)இனெ யன்றியுண்டோ!
உன்புலத்தை ஓரின்அருட்கு ஒப்பாவாய் நெஞ்சேநீ
தென்புலத்தா ரோடுஇருந்து செய்பூசை கொண்டுஅருளே. (3)

குற்றங் குறையக் குணமே விடஅருளை
உற்றவரே ஆவிக்கு உறவாம் பராபரமே. (4)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால், பிறப்பை யொழித்து திருவடி நிழலில் சேர்த்துக் கொள்ளுமாறு இறைவனை வேண்டுகிறார்.

(இ-ள்) வேதாந்தத்தில் விளங்கும் விழுப்பொருளான பெருமானே! அடியேனுக்கு இதுவரை எத்தனை பிறப்பும், எத்தனை இறப்பும் நேர்ந்ததோ. அத்தனை பிறப்பு இறப்புகளையும் சர்வஞ்ஞனாகிய நீயே அறிவாய்; அறிவில்லா தவனாகிய நான் அறியமாட்டேன்; மனம் வாக்கு, காயம் மூன்றும் உன்னுடை யனவே; இப்போது எடுத்திருக்கும் பிறப்பையும் இனி என்னால் தாங்கி யிருக்க முடியாது; ஆகையால், இங்கு அடியேனை உன்னுடைய திருவடி களுக்குத் தொழும்பனாக வைத்து அருள்வாயாக, (எ-று)

உயிர்கள் எடுக்கும் பிறப் பிறப்புகளுக்கு அளவில்லை யாதலால், "எத் தனை பிறபபோ எத்தனை இறப்போ எளியனேற்கு இதுவரை அமைத்தது" என்றார் தாயுமானார்.

2. இதனால், கடவுளைப் பாவனை செய்ததால்தான் சித்துப் பொருள் எனும் பெயர்க்குத் தாம் உரித்தாகலாம் என்கிறார்.

(இ-ள்) பருகுவதற்குரிய பொருளான அமுதம் போன்றவனே! சிறந்த பொருளாகி நீக்கமற எங்கும் நீ நிறைந்திருக்க, நான் உன்னிடம் வந்து என்னை உனக்குக் கொடுத்தும், நீயாகாது சடப்பொருள்போல என் கிடக் கின்றேன்? பழவினையின் பயனல்லவா இதற்குக் காரணம? ஆகவே, உன்னை என் மனதில் பாவனை செய்கின்றமையால் நான் சித்துப்பொருள் என்னும் பெயர்க்குத் தகுதி யுடையவனாயினேன்; மிக நல்ல அரசர் பெருமானே! நான் என்ற நினைப்பே இழந்து இருக்கவேண்டு மென்பதே அடியேனுடைய குறிக்கோளாகும். (எ-று)

தான் என்ற நினைப்பை யிழந்தால்தான் தலைவனையடைய முடியுமென்ற சைவ சித்தாந்த உண்மை இப்பாட்டில் நன்கு விளக்கியிருக்கிறார். "முன்னை அவனுடைய நாமங் கேட்டாள்" என்ற முதலடியுடைய பாட்டில் உள்ள "தன்னை மறந்தாள் தலைப்பட்டாள் நங்கை தலைவன்தானே" என்று அப்பர் சுவாமிகள் வாக்கும் இங்கு சிந்திக்கத் தக்கது.

3. இதனால், தன் நெஞ்சுக்கு அறிவுறுத்துகிறார்.

(இ-ள்) நெஞ்சமே! உலகமெல்லாம் இன்பம் நிறைந்து வாழ்வதற்கு உன்னுடைய அன்பே காரணமென்று கூறுவர் அறிஞர்; அவ்வன்பும் உனக்கு வேறாக உண்டோ! உனது அறிவை ஆராய்ந்தால், திருவருளுக்குச் சமான மாவாய்; ஆகையால், நீ பிதிர் தேவதைகளுடன் இருந்து நான் செய்யும் பூசையை ஏற்றுக் கொண்டருள்வாயாக. (எ-று)

4. இதனால், திருவருள் பெற்றவர்தாம் ஆவிக்குறவாவர் என்கிறார்.

(இ-ள்) பரம்பொருளே வினையாகிய குற்றங்கள் குறையவும், புண் ணிய மேலிடவும் உன்னுடைய திருவருளைப் பெற்றவர்களே ஆன்ம நேயராவர். (எ-று)




# வெற்றியின் படிப்பினை





"வெற்றி கொண்டே சங்கை ஊதுவோமே!" என்று தேசியகவி பாரதியார் கூடிய சீக்கிரம் நம் நாட்டில் சுயராஜ்ய சூரியன் உதயமாகப் போவது திண்ணம் எனத் தீர்க்க தரிசனமாக அறிந்து வெற்றி சங்கு ஊதி விட்டுச் சென்றார். அத்தகைய பெரியார் இப்போது உயிரோடு இருந்திருப்பாரானால், இன்று நம் நாட்டின் மூலை முடுக்கு எங்கு பார்த்தாலும் முழங்கிக் கொண்டிருக்கும் வெற்றி முழக்கத்தைக் கேட்டு அளவிலா மகிழ்ச்சி யடைந்திருப்பார் என்பது நிச்சயம். ஏனென்றால், தமிழ் மக்களி டையே ஊக்கமும், உற்சாகமும், சுதந்திர தாகமும் உண்டாவதாக அவர் ஊதிய சங்கின் வெற்றி முழக்கத்தைப் பின் பற்றி, இன்று நம் மக்கள் உண்மையாகவே ஜெயகோஷஞ் செய்து விட்டார்க ளல்லவா!

பிரிட்டிஷ் சர்க்கார் இந்தியாவுக்குப் புதிய அரசியலை வழங்கி யிருக்கிறார்க ளென்பதும், அது அமுலுக்கு வருவதற்காகவே, அப் புதிய அரசியல் சட்டத்தின்படி சமீபத்தில் பொதுத் தேர்தல் நடை பெற்ற தென்பதும் ‘ஆனந்தன்’’ வாசகர்களுக்குத் தெரிந்ததேயா கும். இப் பொதுத் தேர்தலில் காங்கிரஸ் கலந்து கொள்வதென்று உத்தியோக தோரணையில் தீர்மானித்ததும், அத் தீர்மானத்தின்படி எல்லா மாகாணங்களிலும் காங்கிரஸ் சார்பாக, அகில இந்திய காங்கி ரஸ் பார்லிமெண்டரி போர்டார் அபேக்ஷகர்களை நிறுத்தியதும் யாவ ரும் அறிந்ததேயாகும்.

நமது சென்னை மாகாணத்தில் அரசாங்க சபைக்கும், ஜனப் பிரதிநிதி சபைக்கும் காங்கிரஸ் அபேட்சகர்கள் நிறுத்தப்பட்டார்கள்.

மேல் சபை, கீழ் சபையாகிய இவ் விரு சபைகளுக்கும் முக்கியமாகப் பொதுத் தொகுதிகளிலும், முஸ்லீம், ஹரிஜனத் தொகுதி போன்ற தனித் தொகுதிகளில் சில இடங்களிலும் மட்டுமே சென்னை மாகாண காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டார் அபேட்சகர்களை நிறுத்தினர்கள். அவ்வாறு நிறுத்தப்பட்ட காங்கிரஸ் அபேட்சகர்களுக்கே பெருவாரியாக ஓட்டளிக்க வேண்டுமென்று நாமும் சென்ற மாத "ஆனந்தன்" தலையங்கத்தில் குறிப்பிட்டு எழுதியிருந்தோம். அவ்விதமே தமிழ் மக்கள் தேச விடுதலைக்காகப் பாடு படும் காங்கிரஸ் அபேட்சகர்களையே ஏகமனதாக ஆதரித்துக் தேர்தலில் பெரு வெற்றியடையச் செய்து விட்டார்கள்; அத்துடன் தங்களுக்கும்—மற்ற மாகாண மக்களுக்கில்லாத—பெரும் புகழையும் பெயரையும் தேடிக் கொண்டார்கள். அவ்விதம் காங்கிரஸுக்கு இணையற்ற வெற்றியை வாங்கித் தந்த தமிழ் மக்களை நாம் பாராட்டுகிறோம்.

நம் சென்னை மாகாணத்தில், அரசாங்க சபைக்கு 46 ஸ்தானங்களும், ஜனப்பிரதிநிதி சபைக்கு 215 ஸ்தானங்களும் பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய ஸ்தானங்களாக சர்க்கார் ஏற்படுத்தினர்கள். ஆகவே, இவ் விரு சபைகளுக்கும் நடந்த தேர்தல்களின் முடிவிலிருந்து காங்கிரஸுக்கே பெரு வெற்றி யேற்பட்டிருக்கிற தென்பதை யாவரும் எளிதில் அறிவர். இத் தேர்தல் முடிவைக் கொண்டு, காங்கிரஸ் நிலைமையையும், மற்ற கட்சிகளின் நிலைமையையும் பின் வருமாறு அறிந்து கொள்ளலாம்.

அரசாங்க சபை.

| | |
|---|---|
| காங்கிரஸ் | 26 |
| ஜஸ்டிஸ் | 4 |
| சுயேச்சை | 1 |
| முஸ்லிம் | 6 |
| இந்தியக் கிறிஸ்தவர் | 3 |
| ஐரோப்பியர் | 1 |
| மற்றவர் | 5 |
| ஜனநாயகக் கட்சி | 0 |
| | 46 |

ஜனப்பிரதிநிதி சபை.

| | |
|---|---|
| காங்கிரஸ் | 159 |
| ஜஸ்டிஸ் | 17 |
| ஜன நாயகம் | 1 |
| முஸ்லீம் புரோகாஸிவ் கட்சி | 1 |
| முஸ்லீம் லீக் | 10 |
| எக்கட்சியிலும் சேராத முஸ்லீம்கள் | 8 |
| ,, ,, மற்றவர்கள் | 9 |
| ஆங்கிலோ இந்தியர் | 2 |
| ஐரோப்பியர் | 3 |
| ஐரோப்பிய வர்த்தகர் | 4 |
| தென்னிந்திய வர்த்தகசபை | 1 |
| | 215 |

மேற்கண்ட விவரங்களைக்கொண்டு காங்கிரஸ் அரசாங்கசபையில் 46-ஸ்தானங்களுக்கு 26 ஸ்தாங்களையும், ஜனப்பிரதிநிதிச் சபையில் 215-ஸ்தானங்களுக்கு 159-ஸ்தானங்களையும் கைப்பற்றி யிருக்கிற தென்று ஏற்படுகிறதல்லவா! எனவே, இவ்விரு சபைகளிலும், மற்ற கட்சிகளைவிட காங்கிரஸுக்கே பெரும்பான்மையான வெற்றி கிடைத்திருக்கிறதென்பதில் சந்தேகமில்லை யன்றோ! பெரு வெற்றி என்பது மட்டும் கூறுவது அமையாது. இணையற்ற வெற்றி-வெற்றியின் சிகரத்தை எட்டிப்பார்க்கும் ஒப்பற்ற வெற்றி யென்றே கூறவேண்டும். ஏனென்றால், ஜனப் பிரதிநிதிசபை தேர்தலில் பொதுத்தொகுதிகளில் காங்கிரஸ் நிறுத்திய அபேட்சகர்கள் அனைவரும் வெற்றி பெற்று விட்டார்கள். முஸ்லீம், கிறிஸ்தவ, ஹரிஜனத் தொகுதிகளில் காங்கிரஸுக்குச் செல்வாக்கே கிடையாது என எதிரிகள் கூறும் கூற்று பொய்க்கூற்றாகும் என்பதை, மேற்படி முஸ்லிம், கிறிஸ்தவ, ஹரிஜனத் தொகுதிகளில் காங்கிரஸ் சார்பில் நிறுத்தப்பட்ட அபேட்சகர்களில் பலர் அடைந்த வெற்றியே நிரூபிக்கப் போதியதாகும். அது மட்டுமா! ஜஸ்டிஸ் கட்சித் தலைவரும், முதன்மந்திரியுமான பொப்பிலி ராஜா, ஜஸ்டிஸ்கட்சியின் மற்றொரு பெரிய (தமிழ்நாட்டுத்) தலைவரான இரண்டாவது மந்திரி ஸர். பி. டி. ராஜா ஆகியவர்களும், ஸர். ஏ. பி. பாத்ரோ, ராமநாதபுரம் ராஜா, சேத்தூர் ஜமீன்தார் போன்ற ஜஸ்டிஸ்

பிரமுகர்களும் படுதோல்வி யடைந்து மூலையில் போய் ஒடுங்கி விட்டார்கள். தேர்தலுக்கென்றே தோன்றி லட்சக்கணக்கில் பணத்தை வாரி யிறைத்த ஜனநாயகக் கட்சியினர் (ஒருவர் தவிர) அனைவரும் இருக்கும் இடந் தெரியாமல் போய்விட்டனர். மேற்படி கட்சி ஸ்தாபகரும், தலைவருமான பித்தாபுரம் மகாராஜா, அவரது குமாரர் பித்தாபுரம் குமாரராஜா, உபதலைவர் மாஜி மந்திரி ஸ்ரீ. எஸ். முத்தையா முதலியார், காரியதரிசி ஸ்ரீ. கே. எம். பாலசுப்பிரமணியம் முதலிய கட்சி முக்கியஸ்தர்களே படுதோல்வி யடைந்ததிலிருந்து ஜனநாயகக்கட்சி போன்ற வௌவால் கட்சிக்கு நாட்டில் இடமே கிடையாது என்று நன்கு தெளிவாகிறது. மேலும், இதுவரை பணத்தைக் கொண்டும், செல்வாக்கைக் கொண்டும், அதிகாரத்தைக் கொண்டும் பொதுமக்களை ஏமாற்றி அவர்கள் பெயரால் சட்டசபைகளையும், பட்டம் பதவிகளையும் ஒரு சிலர் வகித்து அநுபவித்துவந்த காலம் மலையேறி விட்டது என்பதும், இனி, பொதுவாழ்வில் பணமோ, செல்வாக்கோ, அதிகாரமோ, பெரிய மனிதத்தனமோ செலாவணியாகாது என்பதும் இத் தேர்தல் வாயிலாக நிரூபணமாய் விட்டது. பீஹார், ஒரிஸா, ஐக்கிய மாகாணம், மத்திய மாகாணம் போன்ற மாகாணங்களையும் விட, சென்னை மாகாணமே காங்கிரஸுக்குப் பெரு வெற்றியை வாங்கித் தந்திருக்கிறது. அதன் விவரம் பின்வருமாறு:—

| மாகாணம் | மொத்த ஸ்தானங்கள் | காங்கிரஸ் கைப்பற்றியவை |
|---|---|---|
| சென்னை | 215 | 159 |
| ஐக்கிய மாகாணம் | 229 | 133 |
| பீஹார் | 152 | 95 |
| பம்பாய் | 175 | 88 |
| மத்திய மாகாணம் | 112 | 71 |
| ஒரிஸா | 60 | 36 |

ஆகவே, சென்னை மாகாணம் மற்ற மாகாணங்களுக்குத் தலைமை ஸ்தானம் வகிப்பதைக் கண்டு தமிழ்மக்கள் பெருமிதங் கொள்ளாமலிருக்க முடியாது. தமிழ்மக்கள் பொதுவாக உலக விஷயங்களிலும், சிறப்பாக அரசியலிலும் அடைந்திருக்கும் விழிப்பையும், அறிவையும், தாய்நாட்டு விடுதலைக்காகப் போராட காங்கிரஸிடம் கொண்டுள்ள நம்பிக்கையையும், பக்தியையும் இத் தேர்தலில் காட்டி விட்டார்கள். இந்தியாவின் முடிசூடா மன்னனாய்த் திகழும் பண்டித ஜவஹர்லால் நேரு, பாபு ராஜேந்திர பிரஸாத், ஸர்தார் வல்லபாய் படேல் முதலிய தேசியதலைவர்களின் வாழ்த்துதலுக்கும், மற்ற

வர்களின் ஆசீர்வாதத்துக்கும் பாத்திரமாய் இருக்கும் தமிழ் மக்களை நாமும் வாழ்த்துகிறோம்.

பொதுத் தேர்தல் முடிவடைந்து விட்டது. காங்கிரசின் மகத்தான வெற்றியையுங் கண்டுவிட்டோம். இனி, நடைபெற வேண்டியதென்ன? வருகிற ஏப்ரல் முதல் தேதியிலிருந்து புதிய அரசியலின் சகாப்தம் ஆரம்பமாகிறது. அரசாங்க சபையும், ஜனப்பிரதிநிதி சபையும் அன்றுதான் ஆரம்பமாகின்றன. இவ்விரு சபைகளிலும், பெரும்பான்மையாக வந்திருக்குங் காங்கிரஸ்காரர்கள் அரசியல் அதிகாரத்தை யேற்று நடத்தப் போகிறார்களா? இல்லையா? இவ்விஷயம் காங்கிரஸ் மாபெருந் தலைவர்களாலும், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியாராலும் முடிவு செய்யப் படவேண்டிய விஷயமாகும். எல்லா மாகாணங்களிலும் தேர்தல் முடிவுகளெல்லாம் வெளிவந்த பின்னர், வார்தாவில் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் கூடியது. காங்கிரஸ்காரர்கள் பெரும்பான்மையாக வந்துள்ள மாகாணங்களில் மந்திரிபதவி ஏற்றுக் கொள்வதா? வேண்டாமா? என்ற விஷயம்பற்றித் தலைவர்கள் ஆலோசித்தார்கள். மகாத்மா காந்தியும் யோசனை கூறியதாகத் தெரிகிறது. வார்தா கூட்டத்தின் போக்கைக் கவனித்தால், பெரும்பாலான தலைவர்கள், மந்திரி பதவியேற்புக்குச் சாதகமாக இருப்பதாகவே தெரிகிறது. கூடிய சீக்கிரம் புது டெல்லியில் நடைபெறப்போகும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் இவ்விஷயம் முடிவாகத் தீர்மானிக்கப்படும். அநேகமாக, தலைவர்கள் காங்கிரஸ்காரர்கள் மந்திரி பதவியேற்று அரசியலை நடத்த வேண்டுமென்று தீர்மானிப்பார்களென்றே நாம் நம்புகிறோம். ஆகவே அரசாங்கசபை காங்கிரஸ் அங்கத்தினர்களும், ஜனப் பிரதிநிதிசபை காங்கிரஸ் அங்கத்தினர்களும் தலைவர்கள் முடிவுக்குக் கட்டுப்பட்டு அரசியலேற்று நாட்டுக்கும் நமது மக்களுக்கும் நலன் தரத்தக்க காரியங்களையே செய்ய வேண்டு மென்று கேட்டுக்கொள்ளுகிறோம். சென்ற பதினேழு வருஷங்களாக அரசியலை நடத்திவந்த ஜஸ்டிஸ் கட்சிக்காரர்கள் தங்கள் சுயநலத்தையே பெரிதென மதித்து பொது நலத்தைக் கவனியாது ஆட்சி செய்து வந்ததன் பலனை இத்தேர்தலில் அடைந்து விட்டார்கள். ஆதலால், அப்பிற்போக்காளர்களின் தோல்வியே இப்போது பெரும் வெற்றிபெற்றிருக்கும் காங்கிரஸ் அங்கத்தினர்களுக்குப் படிப்பினையாக இருக்குமென்று நம்புகிறோம். எனவே, இத்தேர்தலில் வெற்றி வாயிலாக ஏற்பட்ட படிப்பினையை காங்கிரஸ் அங்கத்தினர்கள் மனதிலிருத்தி, இதுவரை வெளியில் சேவைசெய்து வந்ததுபோலவே, சட்ட சபைகளிலும் சேவை செய்வார்களாக!

ஓம் தத் ஸத்.

# அதிருஷ்டமும் கர்மாவின் சம்பந்தமும்

(வி. டி. ராஜன்)

அதிர்ஷ்ட மென்பது இவ்வுலகில் ஒன்று உண்டென்பது சிலரின் கொள்கை. சிற்சில சமயங்களில் நமக்கு திடீரென ஆச்சரியத்தை உண்டு பண்ணக் கூடிய சில நிகழ்ச்சிகளை நம் இவ்வுலக வாழ்க்கையில் கண் கூடாகக் காண்பதுண்டு. மிகவும் தரித்திர திசையை யடைந்திருக்கும் ஒருவருக்கு புதையலோ அல்லது எதிர்பாராத ஒருவரின் சொத்தோ கிடைத்து அதன் மூலம் அன்னவர் குபேர சம்பத்தை யடைவதும், மற்றொருவர் திடீரென்று ஒருவரும் எதிர்பாராத விதமாய் பெரிய பதவியை யடைவதும் இவ் விரண்டும் ஒவ்வோரிடத்தில் ஒவ்வோர் சமயத்தில் ஆங்காங்கு நிகழக் கூடியவையே. ஆனால் இதனாலேயே இவர்களை நாம் பெரும் அதிர்ஷ்ட சாலிகளென்று மதித்து விடுவதா? கூடாது. ஏனெனில் நம்மிடையே சிலர் நல்ல ஜாதகப்பலனை யுடையவர்களென்றும் நல்ல அதிர்ஷ்டசாலிகளென்றும் கருதப்படுகிறோ மல்லவா? அப்பேர்ப்பட்ட நம்மில் சிலருக்கு ஏன் இவ்வித அதிர்ஷ்டம் தோன்றக் கூடாது? இவற்றிற்கெல்லாம் காரண மென்ன வென்று யோசிக்குமிடத்து எல்லாம் கர்ம விசேஷத்தின் பலனே யென்பது நன்கு விளங்கும். பூர்வ ஜென்மத்திலோ அல்லது பல ஜென்மங்களிலோ இவர்கள் எடுத்துக் கொண்ட பிரயாசையின் மூலம் இவர்கள் மேற்சொன்ன பதவியையும் சம்பத்தையும் அடைகின்றனர். முன் சொன்னவர் பொருளீட்டலே தமது முக்கிய நோக்கமாகக் கொண்டு மற்ற விஷயங்களை விட இவ் விஷயத்தில் முன்னொரு ஜென்மத்திலோ அல்லது பல ஜென்மங்களிலோ அதிகமாக உழைத்து வந்திருப்பர். அதன் பலன் இவரைத் தொடர்ந்து கொண்டே வந்திருக்கும். அவர் மேலும் மேலும் இவ் விஷயத்தில் உழைத்து வந்ததின் பயனாய் ஒரு ஜென்மத்தில் அதாவது இச் சென்மத்தில் அவருடைய காரியம் கை கூடிற்று. இது தான் காரணமாகும். இதே மாதிரி முன் சொன்னவரும் பெரிய பதவிக்காசைப்பட்டு அந் நோக்கத்தோடு உழைத்து வந்திருப்பர். அதன் பலன் அவருக்குக் கிடைத்தது. இதே மாதிரி தான் ஒவ்வொன்றும் அவனவன் பிரயாசையின் பயனாகவே விளைகின்றது என அறிய வேண்டும்.

ஆனால் நவீன நாகரீக மயக்கில் சிக்குண்ட ஒரு சிலர் இவைகளி லெல்லாம் சிறிதும் நம்பிக்கை கொள்வதில்லை. "All these are nonsense! Dam Silly Tamil! All these superstitions!" என்று நம் அருந்தாய் மொழியையும் நம்மவர் கொள்கைகளையும் சிறிதும் மனங் கூசாது இகழ்ந்துரைக்கின்றனர். என்னே இவர்களின் கூற்று! ஆங்கிலப் படிப்பு கொஞ்சம் படித்துவிட்டதனால் தாங்களே இவ்வுலகில் மேதாவிகள் என்ற எண்ணமா

இவர்களுக்கு? அதிலேயே இவர்கள் எல்லா உண்மையையும் கண்டுவிட்டனரோ? அதனால் நம் தாய்மொழியை இகழுகின்றனர். ஆங்கிலப் படிப்பு படித்தால்தானென்ன? அதனாலேயே நம் தாய்மொழியில் உள்ள நாலடியார் திரிகடுகம் நல்வழி மூதுரை நீதிவெண்பா முதலியவைகளையும் குறள் போன்ற அரும்பெரும் நூல்களையும் புரட்டிப் பார்க்கவேண்டாமென்று சொல்லியிருக்கிறதா? அல்லது இவைகளைப் பார்வையிடுவதற்குக் கூட அவர்களுக்கு நேரமில்லையென்றர்த்தமா? என்ன காரணம்? ஏன்? காரண மொன்றுமில்லை. அதில் என்ன இருக்கிறது. தமிழில் என்ன விருக்கிறது என்று இவர்கள் அலக்ஷியம் செய்வதே அதற்குக் காரணம். இன்னும் அநேக விஷயங்கள் தெரிந்து கொள்ளவேண்டியிருக்கும்போதே தங்களுக்கு எல்லாம் தெரிந்துவிட்டதாக இவர்கள் எண்ணிக்கொள்வதே அதற்குக் காரணமாம். குறளையும் மற்றும் சில நூல்களையும் அன்னிய நாட்டாரே அதிக பெருமை பாராட்டி எடுத்துக் கொண்டுபோய் அதிக ஆர்வத்தோடு ஆராய்ச்சி செய்துகொண்டிருக்க இவர்கள் மாத்திரம் இதை அலக்ஷயம் செய்வானேனெனின் இது அவர்களின் அறியாமையேயாகும்.

இன்னும் ஆராயப்புகிலோ இம்மாபெரும் புவியில் ஒருவன் படிப்பில் அதிக கெட்டிக்காரனா யிருக்கிறான். சட்டங்கள் பேசுவதில் அதிக சமர்த்தனாயிருக்கிறான். மற்றொருவனோ கைத்தொழிலில் அதிக தேர்ச்சிபெற் றிருக்கிறான். வேறொருவனோ சித்திரம் தீட்டுவதில் அதிக அநுபவம் வாய்ந்திருக்கிறான். வேறு சிலர் ஆயுதப் பயிற்சியில் அதிக வல்லமைபெற்றிருக்கிறார்கள். சில மேதாவிகள் ரசாயன சாஸ்திரத்திலும் மற்றும் சிலர் கணித சாஸ்திரத்திலும் அதிக நிபுணர்களாக விளங்குகின்றனர். மற்றும் சிலர் மின்சார சக்தியின் உதவியைக்கொண்டு பலரும் பிரமித்துப்போகும்படி நாளுக்கு நாள் ஒவ்வொரு அற்புதமான விஷயங்களைக் கண்டுபிடித்துக்கொண்டே வருகின்றனர்.

தவிர ஒருவர்க்கு வெகுசுலபமாகத் தோற்றுமொரு விஷயம் மற்றவர்க்கு அதிக கஷ்டமாகத் தோற்றுவதும் ஒவ்வொருவர் ஒவ்வொரு காரியத்திலேயே அதிக நிபுணத்வம் அடைந்திருப்பதுவும் இன்னும் இவைபோன்ற மற்றும் சிலவும் ஆராய்ந்து நோக்குமிடத்து இவையெல்லாம் அவரவர் அதனதில் முன் ஜென்மத்தில் எடுத்துக்கொண்ட முயற்சியும் தீவிரப் பிரயாசையின் பலனுமாமென்பது நன்கு விளங்கும்.

கடவுளே இல்லை யென்றும் இயற்கையாகவே யாவும் நடந்தேறிவருகிறதென்றும் இரசாயன சாஸ்திரத்தின் உதவியைக் கொண்டும் மின்சாரத்தின் அபூர்வ சக்தியைக் கொண்டும் இன்னும் சிறிது காலத்தில் இயற்கையைக் கூட மீறி விட்டதென்று சொல்லும்படியான இன்னும் அநேக காரியங்களும் நடக்கக் கூடுமென்றும் சிலர் எதிர்பார்க்கின்றனர். இப்போது உலகத்தில் நடந்துவரும் தினசரி நடை முறைகளெல்லாம் இயற்கையாகவே நடந்தேறி வருகின்றதென்பதுதான் அவர்தம் கொள்கை. ஆனால் அவ்வியற்கையென்பது யாது என்பதை இவர்களேன் சிந்தித்துப் பார்க்கவில்லை? அதுதானே ஸர்வ வியாபியாகிய சர்வேஸ்வரன். அச்சர்வேஸ்வரன் தானே நாம் என்றும் அறைகூவும் அவ்வானந்த சொரூபியாகிய சச்சிதானந்த சிற்சொரூப பரப்பிரம்ம மயமாகிய கடவுள். அதை யேன் இவர்கள் உணரவில்லை?

இயற்கைதான் கடவுளென்பதை இவர்கள் முற்றிலும் அறியவில்லையென்று நாம் இங்கு சொல்வதற்கும் ஒரு விதத்தில் இடமில்லாமல் இருக்கி

றது. ஏனெனில் இவர்கள் அதை உணர்ந்தே இருக்கவேண்டும் முற்று மறிந்தும் அறியாதவர்களைப் போல நடிப்பதும் மேற் சொன்னதை ஒப்புக்கொள்ள மறுப்பதும் என்ன காரண மெனிலோ வெகு நாளாக அக்கடவுளிடம் அன்பு பூண்டொழுகுவதும் மத பக்திக்கும் தெய்வ வழிபாட்டுக்கும் பண்டைக்கால நாகரீகத்துக்கும் சிறந்த கலைகளுக்கும் இன்னவும் பிறவுமாய மற்றெல்லா விஷயங்கட்கும் அறிவின் வளர்ச்சிக்கும் அடிப்பீடமும் பிறப்பிடமுமாகிய நம் மிந்தியாவில் உள்ள இந்து சமூகத்தினரை அவர்தம் மதத்தில் இருக்கும் உண்மையையும் நம்பிக்கையையும் நாளடைவில் இழக்கச் செய்து அவர்களை எந்நாளும் தம் அடிமைகளாக்கி அடக்கி ஆண்டுகொண்டிருக்கலா மென்ற தந்திர நோக்கங்கொண்டே யிருக்குமென்பது வெள்ளிடை மலை.

இனி இயற்கையை மீறுவதென்பது ஒருநாளும் முடியாத காரியம். இயற்கையின உதவியைக் கொண்டே எவ்வளவு வேண்டுமானாலும் சாதிக்கலாம். ஆனால் இயற்கையை மீறுவோ மென்பதோ எக்காளும் முடியாத காரியம். அப்படி யெண்ணிச் செய்யும் காரியமும் சீக்கிரம் அழிந்து பட்டொழியும்.

இக்காலத்தில் எத்தனையோ அற்புதமான இயந்திரங்களும் தந்திரங்களும் அதிசூக்ஷமமாக கண்டுபிடிக்கப்படினும் அவைகளின் கர்த்தாக்கள் அவைகளுக்குக் கொடுக்கும் தீர்க்கமான வயதுக்கு (That means the time of their existence) எவ்வளவோ முன்னரே அழிந்து பட்டொழிகின்றனவே! இவற்றிற்கெல்லாம் காரணம் என்னவென்று என் ஒருவரும் சிந்தித்துத் தெளிவதில்லை.

மேற்சொன்னவை யாவும் அவரவர் தம் மூளையின் அபாரசக்தியாலேயே யெனினும் அவை யாவும் உலகமெலாம் போற்றும் ஒப்பற்ற விலையில்லா மாணிக்கமாகிய நம்மகான் மகாத்மா காந்தி அடிகளின் அரும்பெரும் ஆத்ம சக்திக்கு எவ்விதத்தும் இணையாகாதென்றே சொல்லவேண்டும். ஏனென்றால் இஃதோ இயற்கையை மீறும் நோக்கத்தோடல்லாது தன் ஆத்ம வளர்ச்சிக்குப் பொதுவாக இவ்வுலக க்ஷேமத்தைக் கோரியும் நன்னோக்கத்தோடு பொறுமையுடன் ஈஸ்வர கடாக்ஷத்தை நாடி யநுஷ்டிக்கப்படுவதாதலின் இது மேலும் மேலும் வளர்ந்துகொண்டே போகுமல்லாது என்றும் குறைவுபடாது. இதற்கெந்நாளும் அழிவுமில்லை. இதற்கும் காரணம் அவருடைய நம் மகாத்மாவுடைய பூர்வ ஜென்ம நல்வினைப் பயனின் முதிர்ச்சியும் இச்சென்ம பரோபகார உலக சம்ரக்ஷணார்த்த இடைவிடாத உழைப்பின் மிகுதியுமேயாம்.

இனி முடிவாகக் கூறுமிடத்து இவ்வுலகமே பிரமித்துப்போகும்படியாக கண்டுபிடிக்கப்படும் ஒவ்வொரு அற்புதங்களுக்கும் காரணகர்த்தா கடவுளே யென்றும் மக்களுக்கு வேண்டிய அறிவைக் கொடுத்து யாரார் எவ்வெவ்விதமாக அதாவது எவ்வளவு தூரம் அதை விருத்திசெய்கின்றனர் பார்ப்போம் என்ற நோக்கங்கொண்டு அவ்விறைவனியற்றும் அவனின் அற்புதத் திருவிளையாட்டெனலே சாலப் பொருந்துமெனக் கருதுகின்றேன்.

நாம் எல்லோரும் கடவுளுடைய அருளுக்குப் பாத்திரர்களாவோமாக! கடவுள் நம்மை யென்றும் காப்பாராக.

# பொருள் நூல்

ஸ்ரீகண்ட இராமன், எம். ஏ., எல். டி.,



(577-வது பக்கத் தொடர்ச்சி.)

ஒரு மனிதனுக்கு ஒரு குறிப்பிட்ட தேவை கிடைக்கும்பொழுது அவனுடைய விருப்பமானது அத் தேவையின் அதிகரிப்பால் விரிந்து செல்லாமல் குறுகிக்கொள்ளும் தன்மையைக் கொண்டதாக இருக்கிறது. (உ-ம்.) ஒரு மனிதன்; அவனுக்கு தாகம் ஏற்படுகிறது. அதைப் போக்கிக்கொள்ள அவன் ஒரு கோப்பை ஜலத்தைப் பருகுகின்றான். மற்றொரு கோப்பை நீரைச் சாப்பிடும்பொழுது அவனுடைய தேவையின் அளவு குறைகிறதே அல்லாமல் விருத்தியாவதில்லை. 3, 4, அதற்கு மேலும் சில கோப்பைகளை அவன் குடிப்பதானால் அவனுடைய தேவையின் அளவு தெவிட்டின நிலைமைக்கு வந்துவிடும். அதற்குமேல் அவன் நீரின் உபயோகத்தை வேண்டான். இத்தகைய மனிதனுடைய தேவைகளைப்பற்றி பொருளாதார சாஸ்திரத்தில் குறைபடும் உபயோகச் சட்டம் (The Law of deminishing Utility) என்று ஒன்று இருக்கிறது.

மனிதனுக்கு தேவை பல உள. அத்தேவைகளெல்லாம் ஒன்றுடன் ஒன்று போட்டி யிடுகின்றன. அதனால் மனிதன் தனக்கு வேண்டியவற்றையே தேர்ந்து எடுத்துக் கொள்ளவேண்டியவனாய் இருக்கிறான். (உம்) ஒருவன் "நாடகம்" போகலாமென்று இருக்கிறான். அல்லது அதற்கு பதிலாக அவன் ஒரு "டாக்கி"க்கு போகக்கூடும். ஒரு பள்ளிக்கூட மாணவன் நான்கணாவிற்கு ஒரு சோப்பை வாங்கிக்கொள்ளலாம். அல்லது சோப்பிற்கு பதிலாக ஒரு கத்தியை வாங்கிக்கொள்ளலாம் இத்தகைய தேவைகள் போட்டியிடுகின்றன. இது மாற்றிக்கொள்ளும் சட்டம் (The law of Substitution) என்று சொல்லப்படும்.

சில தேவைகள் ஒன்றுகூடினாலொழிய மனிதனுக்கு சுகத்தைத் தராது. அத் தேவைகள் தனித் தனியாக நீடித்து ஏற்படுவதானால் பயன்படாது. ஒரேகாலத்தில் ஒரே சமயத்தில் அவை சேர்ந்து வரவேண்டும். (உ-ம்.) ஒரு மனிதனுக்கு மோட்டார்வண்டி அவசியம், பெட்ரோல் தேவை. இந்த இரண்டு தேவைகளும் சேர்ந்து வந்தாலொழிய சந்துஷ்டி கொடாது. அதேமாதிரி ஒருவன் தானாகவே க்ஷவரம் செய்துகொள்ள வேண்டுமாயின் பாதுகாக்கும் கத்தியும் (Safety razor) பிலேடுகளும் (Blades) வேண்டும்.

### மனிதனுக்கு தேவையினால் உண்டாகும் விருப்பம்

இந்த விருப்பத்தை ஆங்கிலத்தில் (Demand) என்று சொல்லுவார்கள். இது பலர் சேர்ந்து சில சாமான்களைக் கேட்கலாம். அல்லது சில சாமான்களாகவே ஒரு கூட்ட விருப்பம் (Group demand) எழலாம். (உ-ம்,) ஒரு கூலி ஆளின் தேவையினால் உண்டாகும் விருப்பம் பின்வருமாறு ஆகாரம், துணிமணிகள் முதலாயின. ஒரு மாணவனுடைய கூட்ட விருப்பம் புஸ்தகங்கள், தினசரிகள், பத்திரிகைகள், விளையாடும் சாமான்கள், ஆக இருக்க

லாம். இதனால் தேவையை முன்னிட்டு உண்டாகும் விருப்பம் ஒவ்வொரு மனிதனிடத்திலும் வெவ்வேறு விதமாக இருககலாம். ஒன்று அவனுடைய விருப்பங்களை ஒத்துப் போகலாம். இரண்டாவது அவனுடைய வாழ்க்கை நிலைமையை அனுசரித்து இருக்கலாம்.

## உபயோகம் (Utility)

தேவையை பூர்த்தி செய்விக்கும் சக்தி என்று பொருள்படும். செல்வத்தினின்றும் உண்டாகும் உபயோகத்தில் மதிப்பு என்று கொள்ளலாம். செல்வத்திற்கு சில தேவைகளை பூர்த்தி செய்விக்கும் தன்மை யிருக்கிறது. தேவையை பூர்த்தி செய்விக்கும் விஷயத்தைப்பற்றி பொருளாதார சாஸ்திரம் அதிகமாக சொல்லுகிறது.

## குறைபடும் உபயோகச் சட்டம் (The Law of Deminishing Utility)

ஒவ்வொரு குறிப்பிட்ட தேவையும் தெவிட்டும் நிலைமைக்கு வரக் கூடியது. ஆனால் சில தேவைகள் அங்ஙனம் இராது. சில சமயங்களில் ஒரு மனிதனுடைய குறிப்பிட்ட தேவை ஒரு அளவுக்குள் அடங்கிவிடும். ஒரு குறிப்பிட்ட சாமானின் மீதுள்ள விருப்பம், எல்லாம் சரியாக இருக்கும் பக்ஷத்தில், அந்த சாமானின் அதிகரிப்பால் குறைந்துகொண்டே வரும். இதற்கு பின்வரும் திருஷ்டாந்தம் அருத்தம் செய்து கொள்வதற்கு அனுசரணையாக இருக்கும்:—

கிருஷ்ணனுக்கு 'சுருட்டு' குடிப்பதில் பிரியம். அதன் பொருட்டு அவனுக்கு ஒரு மாதத்திற்கு ஒரு பவுண்டு புகையிலை வேண்டும். இந்த அளவுள்ள புகையிலை அவனுடைய முக்கியமான தேவை பூர்த்தி செய்விக்கிறது.

இந்த புகையிலையினால் எழும் உபயோகம் அவனுக்கு 100 புள்ளி சந்தோஷத்தைக் கொடுப்பதாக வைத்துக் கொள்வோம். இங்கு ஒரு பவுண்டு புகையிலை அவனுடைய சந்தோஷத்தினால் எழும் உபயோகத்தைக் காண்பிக்கிறது.

கிருஷ்ணன் இரண்டுபவுண்டு எடையுள்ள புகையிலையை வாங்குகிறான். இந்த இரண்டாவது பவுண்டு புகையிலை அவனுக்கு அவ்வளவு அவசரமான தேவையாக இராமையால் அவனுக்கு ஏற்படும் உபயோகத்தில் உண்டாகும் சந்தோஷ மிகுதியை குறைக்கிறது. இதனால் முதலாவது பவுண்டின் உபயோகம் 100 புள்ளிகளாகவும், இரண்டாவதாக வாங்கிய பவுண்டின் உபயோகம் குறைவுபடுவதால் அதை 80 புள்ளிகளென்றும் வைத்துக் கொள்வோம்.

அவன் மூன்று பவுண்டு புகையிலை வாங்குகிறான். இந்த மூன்றாவது பவுண்டினால் ஏற்படும் உபயோகம் இரண்டாவது பவுண்டினால் ஏற்பட்ட உபயோகத்தை விட குறைந்திருக்கும். இந்த குறைந்த மூன்றாவது பவுண்டின் உபயோகத்தை 60 புள்ளிகளென்று வைத்துக் கொள்வோம். இதனால் நீங்கள் தெரிந்துகொள்ளும் உண்மை என்ன? ஒருவன் ஒரு குறிப்பிட்ட சாமான்மீது கொண்டுள்ள விருப்பம் அச்சாமான் அதிகமாக பெருகுகையில் விருப்பம் குறைந்துபோகும் எனும் உண்மையைக் காண்பிக்கிறது. உங்களுக்கு நான்கு ஜிலேபிகளால் ஏற்படும் சந்தோஷம் பல ஜிலேபிகளை சாப்பிடுவதால் குறைந்துபோகும். இது அனுபவபூர்வமாக நிகழும் விஷயம்.

(தொடரும்.)

# வைஷ்ணவ ஆசார்யர் பிரபாவம்

(T. R. பெரிய நம்பியார்.)

இராமாநுசர் என்பவர் ஓர் சிறந்த ஸ்ரீவைஷ்ணவ குரு. கோவிந்தன் இவரது சிஷ்யன். இவர்கள் ஸ்ரீரெங்கத்தில் வாசம் செய்தனர். ஓர் நாள் கோவிந்தன் ஓர் கூட்டத்திலிருக்கும்போது கூட்டத்தார் கோவிந்தனது ஞான, பக்தி, வைராக்கியங்களை சிலாகித்துப் பேசி தலை குலுக்கினார்கள். அப்போது கோவிந்தனும் அவர்களை நோக்கி "நீங்கள் கூறுவது சரிதான், நீங்கள் கூறும் புகழ்வார்த்தைகள் என் பக்கல் ஒக்கும் ஒக்கும்" எனக் கூறி தானும் தலை குலுக்கினான். இதைக் கூட்டத்தார் கண்டு ஆச்சர்யமுற்று இராமாநுசரிடம் சென்று கோவிந்தனது செயலைத் தெரிவித்தனர்: இராமாநுசர் கோவிந்தனை யழைத்து ;

"கோவிந்தா! கூட்டத்தார் உன்னைப் புகழ்ந்து பேசினால் நீ செய்ய வேண்டிய தென்ன? அப் புகழ்ச்சிக்கு யான் அருகதையில்லை யென்று நைச்சியானு சந்தானம் செய்ய வேண்டாமா? அப்படிச் செய்யாமல் அவர்கள் கூறுவதை நீயும் அங்கீகரித்துத் தலை குலுக்கினால் அது தற்புகழ்ச்சி யாகு மல்லவா?"

கோவிந்தன்:—(இராமாநுசரை வணங்கி) "ஸ்வாமி! முழு மூடனை அடியேனை இவ்வளவு பிரக்கியாதியாகும்படி செய்வித்தது தாங்களல்லவா? ஆதலால் அடியேனுக் கேற்படுகிற பிரக்கியாதிக ளெல்லாம் தங்களைச் சார்ந்ததேயன்றி அடியேனுக் கொன்று மில்லை. ஆனது பற்றியே அவர்கள் கூறும் புகழ் வார்த்தைகளை அடியேன் அங்கீகரிக்க நேரிட்டது."

* * * *

பின்னொரு நாள் மாலை நேரத்தில் ஓர் வீட்டில் ஓர் தாசி பாடிக் கொண்டிருந்தாள். அப்போது வீதியின் வழியே சென்று கொண்டிருந்த கோவிந்தன் அப் பாடலைக் கேட்டுப் பரவசப்பட்டு வீதியிலேயே நின்று தலையை யசைத்தவண்ணமா யிருந்தான். இதை சில ஸ்ரீ வைஷ்ணவர்கள் கண்டு இராமாநுசரிடம் சென்று "ஸ்வாமீ! நம் கோவிந்தன் மாலை நேரத்தில் செய்ய வேண்டிய சந்தியாவந்தனத்தையும் மறந்து வீதியில் நின்று ஓர் தாசியின் பாடலைக் கேட்டு ஆனந்தித்துக் கொண்டிருக்கிறா" னெனக் கூறினார்கள். இராமாநுசர் கோவிந்தனைத் தருவித்து ;

"கோவிந்தா! நீ இதுவரை ஓர் தாசியின் பாடலைக் கேட்டு ஆனந்தித்துக் கொண்டிருந்தா யெனக் கேள்வியுற்றோம். காமுகர்க ளல்லவா தாசியின் மயக்கில் ஈடுபடுவார்கள். உனக்கே னிந்தத் துர்ப்புத்தி உண்டாயிற்று?"

கோவிந்தன்:—"ஸ்வாமி! அத்தாசி தங்களுடைய கீர்த்திப் பிரதாபங்க

டங்கிய தாலாட்டை இனிய குரலில் பாடினன். அது அடியேனது செவியிற் படவே செவிக்கினிய செஞ் சொல்லாய் அடியேனை மயக்கி விட்டது. ஆசார் யனது குணுனுபவத்தைக் காட்டிலும் சந்தியாவந்தனம் அடியேனுக்குப் பெரிதாய்த் தோற்ற வில்லை."

* * * *

ஒரு காலத்தில் கோவிந்தன் பெரிய திருமலை நம்பிகளுக்கு சிஷ்யனு யமைந்து சகல கைங்கர்யங்களும் செய்து கொண்டிருந்தான். ஓர் நாளிர வில் கோவிந்தன் நம்பிகளுக்குப் படுக்கை திருத்தியமைக்கும் போது படுக் கையில் தான் மூன்றுறப் படுத்து உருண்டு புரண்டு எழுந்தான். இதைக் கண்ணுற்ற இராமாநுசர் கோவிந்தன் செயலை நம்பிகட்குத் தெரிவித்தார். நம்பிகள் கோவிந்தனை யழைத்து;

"கோவிந்தா! எமக்காகத் திருத்திய படுக்கையில் நீ மூன்றுறப்படுத்து எழுந்ததாகக் கேள்வியுற்றோம். ஆசார்யன் விஷயத்தில் நீ இப்படி அபசாரப் படலாமா? இவ் வபசாரத்திற்குப் பலன் என்ன வென்பது உனக்குத் தெரி யுமா?'

கோவிந்தன்:—"தெரியும் ஸ்வாமி! நரகமே இதற்குப் பலன்."

நம்பிகள்:—"இது தெரிந்திருந்தும் இப்படிச் செய்வானேன்?"

கோவிந்தன்:—"அடியேன் திருத்தியமைத்த படுக்கையில் ஏதாவது தூசு துரும்புக ளிருந்து தங்கள் திருமேனிக்கு ஊறுதல், உறுத்தல் செய் யாமைக்காக அடியேன் மூன்றுறப் படுத்துப் பரிசோதனை செய்தேன். எவ் விதமும் தங்கள் திருமேனியின் சுகத்திற்குப் பங்கம் நேரிடாமல் பாதுகாப் பதே அடியேனது கடமை. இதனால் அடியேனுக்கு நரகானுபவம் வந்தா லும் வரட்டும். அனுபவிக்கச் சித்தமா யிருக்கிறேன்."

* * * *

பட்டர் என்பவர் ஸ்ரீ வைஷ்ணவ ஆசார்ய பரம்பரையைச் சேர்ந்தவர். கல்வி கேள்விகளில் தேர்ந்தவர். ஓர்நாள் இவர் சீடர்களுக்கு உபதேசம் செய்யும்போது "மாந்தர்கள் பகவானை அலங்கரித்துக் கண்டு களிக்க வேணு மே யொழியத் தங்களைத் தாங்களே அலங்கரித்து ஆனந்திப்பது கூடா தென உபதேசம் செய்தார். பின் சில தினங்கள் கழித்து ஸ்ரீ ரெங்கநாதப் பெரு மான் சந்நிதியில் அத்யயன உற்சவம் நடை பெற்றது. ஏராளமான ஜனங்கள் கூடினார்கள். ஆசார்யரான பட்டரும் சர்வாபரண பூஷிதராய் உயர்ந்த பட்டுப் பீதாம்பரங்களை யணிந்து ரெங்கநாதன் சந்நிதிககு வந்திருந்தார். அப்போது பட்டருடைய சிஷ்யர்கள் பட்டருடைய படாடோபத்தைக் கண்டு "நமது ஆசார்ய ஸ்வாமி நமக்குச் சொல்வதொன்று, தான் செய்வ தொன்றுமா யிருக்கிறது" எனத் தங்களுக்குள் பேசி முணுமுணுத்துக் கொண்டார்கள்.

இதையறிந்த பட்டர் அச்சீடர்களை நோக்கி "சீடர்காள்! உங்கள் நினை வில் ஓடுவதை அறிந்தோம். யாம் எம்மை அலங்கரித்துக் கொண்டது எமது மகிழ்ச்சிக்காகவல்ல. இதோ பாருங்கள்! ஸ்ரீ ரெங்கநாதன் எழுந்தருளும்

பந்தலை எவ்வளவு சிங்காரமாய் அலங்கரித்திருக்கிறது. பந்தல் கால்களில் எவ்வளவு அலங்காரமான பொம்மைகள் வைக்கப் பட்டிருக்கிறது. அதுபோல் யாமும் இப் பந்தலின் காலுக்கு ஒரு பொம்மையாக அமைந்து நிற்கவே இத் தகைய கோலம் கொண்டோம். இவ்வலங்காரங்க ளெல்லாம் ரெங்கநாதனது ஐசுவரியத்தை விளக்குதற்காகவும் இங்குகூடும் பக்த கோஷ்டிகளின் மூகோல் லாசத்திற்காகவும் ஏற்பட்டிருக்கிற தென்பதை நினைவில் வையுங்கள்" எனக் கூறினார்.

*  *  *  *

பட்டர் ஐந்து பிராயமா யிருக்கும்போது ஓர்நாள் வீதியில் புழுதி யளைந்து விளையாடிக் கொண்டிருந்தார். அப்போது ஓர் அத்வைத வித்வான் பல்லக்கில் ஆரோகணித்து சின்னம் முதலிய விருதுகள் ஊதிவர வீதியின் வழியாய் வந்துகொண்டிருந்தார். பட்டர் இம் முழக்கத்தைக்கேட்டு எறிட் டுப்பார்த்து "யாரடா இவன்! இராமாநுசர், ஆழ்வான், எம்பார் முதலிய ஆசார்யஸ்வாமிகள் எழுந்தருளி யிருக்கும்படியான இந்த க்ஷேத்திரத்தில் விரு தூதிக்கொண்டு பல்லக்கில் வருகிறான். இவன் கெர்வத்தை அடக்கவேணு" மென்றெண்ணி அப் பல்லக்கின் முன்னே போய் நின்றார். வித்வான் குழந் தையை நோக்கி;

"குழந்தாய்! என் பல்லக்கை மறித்துக்கொண்டு நிற்கிறாய்?"

பட்டர்:—"நீர் வித்வானா யிருந்தால் யான் கேட்கும் சிறு கேள்விக்கு விடையிறுத்து அப்பால் செல்லவேண்டும்."

வித்வான்:—(சிரித்து) "சரி, அப்படியே யாகட்டும். உன் கேள்வியைச் சொல்லு?"

உடனே பட்டர் ஒரு கை நிறையப் புழுதிமண்ணை அள்ளி வித்வா னிடம் காட்டி "இதில் எவ்வளவு புழுதி அடங்கி யிருக்கிறது? சொல்லும்!" எனக்கேட்க வித்வான் விடை சொல்ல வகையறியாமல் மிரள மிரள விழித் தான். பட்டர் சிரித்து இது ஒரு கைப்பிடி மண்ணென்று சொல்ல வகை யறியாத உமக்கு பல்லக்கும் விருதும் எதற்கு எனக்கூற, வித்வான் வெட்கித் தலை குனிந்தான்.

*  *  *  *

பட்டர் ஆசார்யரா யிருந்து தர்ஸனத்தை நிர்வகித்து வரும்போது வீர சுந்தரன் என்ற ஓர் அரசன் பட்டருக்கு விரோதியாயிருந்து பல கஷ்டங்களை உண்டு பண்ணிக்கொண் டிருந்தான். சிலகாலம் சென்ற பிறகு தற்செயலாய் அவ்வரசன் மாண்டுபோக, இதையறிந்த சில ஸ்ரீ வைஷ்ணவர்கள் மகா சந் தோஷத்துடன் பட்டரின் திருத்தாயாரான ஆண்டா ளம்மையிடம் ஓடிவந்து "அம்மணீ? பட்டரின் விரோதியான வீரசுந்தரன் மாண்டு போனான்" எனக் கூறிப் பல ஆர்ப்பாட்டங்களைச் செய்தனர்.

ஆண்டாளம்மை இதை யறிந்ததும் மகா துக்கத்துடன் திருமாளிகைக் கதவைச்சாத்தி ஓர் மூலையி லிருந்து உரத்த குரலில் அழத் தொடங்கினாள்.

இதைக் கண்ட ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஆச்சர்யமுற்று ஆண்டாளம்மையை நோக்கி;

"அம்மணீ! விரோதியான அரசன் மாண்டு போனால் நாமெல்லோரும் சந்தோஷம் கொண்டாட வேண்டியிருக்க, அப்படிச் செய்யாமல் நீர் இப்படித் துக்கிப்பதின் காரணம் என்ன?"

ஆண்டாள்:—"பிள்ளைகாள்! நீங்கள் நுணுக்கமாய் ஒன்றையும் கவனிக்கிறதில்லை. மாண்டுபோன வீரசுந்தரன் நம் ஆழ்வானது சிஷ்யனல்லவா? தற்காலம் அவன் புத்திகெட்டு பலருக்குப் பல கெடுதிகளைச் செய்துவந்தாலும் இன்னும் கொஞ்ச காலம் உயிருடனிருந்தால் ஒரு வேளை அவனுக்கு நற்புத்தி பிறந்து பலரிடம் அனுதாபங்காட்டி மன்னிப்புக் கேட்டு உய்வதற்கு இடமுண்டு. இப்போது அவன் மாண்டுபோனபடியால் இனி அப்படிப்பட்ட உஜ்ஜீவனத்திற்கு வழியில்லை. ஆழ்வானுக்கு சிஷ்யனுயமைந்த ஓர் ஆத்ம வஸ்து அநியாயமாக யமபடர்கள் கையிலகப்பட்டு வருந்த நேரிட்டதேயென்ற துக்கம் அடியேனை வாட்டுகிறது."

7. உய்யக்கொண்டார் என்பவர் ஸ்ரீவைஷ்ணவ ஆசார்யர்களில் ஒருவர். அவருக்கு மணக்கால் நம்பி என்ற ஓர் சிஷ்யன் உண்டு. ஓர் நாள் உய்யக் கொண்டாரது புத்திரிகள் இருவர் திருக்காவேரிக்கு ஸ்நானம் செய்யச் சென்றார்கள். அப்போது மணக்கால் நம்பியும் துணையாகச் சென்றார். அப்பால் அப்பெண்கள் ஸ்நான முடித்துத் திரும்புகையில் வழியில் சேறுந் தண்ணீருமாக ஒரு சிறுகால் எதிர்ப்பட, அவர்கள் அதிலிறங்க அசங்கியப்பட்டு திகைத்து நின்றார்கள். அப்போது மணக்கால் நம்பி திடீரென அச்சேற்றில் குப்புற விழுந்து படுத்துக்கொண்டு தன் முதுகில் அடிவைத்து அச்சேற்றைக் கடக்கும்படி அப்பெண்களை வேண்டிக்கொண்டார். அவ்விதமே பெண்களும் மணக்கால் நம்பியின் முதுகில் அடிவைத்து மிதித்து சேற்றைக் கடந்து திருமாளிகை சென்றார்கள்.

இதுவிபரம் உய்யக்கொண்டாருக்கு அறிவிக்கப்படவே அவர் புத்திரிகளைக் கோபித்து மணக்கால் நம்பியிடம மன்னிப்புக் கேட்கும்படி அவர்கட்குக் கட்டளையிட்டனர். அப்போது மணக்கால் நம்பி உய்யக்கொண்டார் பாதங்களில் விழுந்து சேவித்து "சுவாமீ! பிறர்க்கு உதவி செய்வதே மனித ஜென்மம் எடுத்ததின் பலனாயிருக்கிறது. அதிலும் ஆசார்ய புத்திரிகளுக்கு உதவி செய்வது மிகச் சிறந்ததாகிறது. ஏதோ அதிர்ஷ்டவசமாய் இன்று அடியேனுக்கு அந்த பாக்கியம் கிடைத்தது. இனி 'பிரதி தினமும் அந்த பாக்கியம் அடியேனுக்குக் கிடைக்கும்படி அருள்புரியவேண்டும்" எனக் கூறினார்.



# திருமண ஓலை

—(0)—

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

கீழ்வானத்தில் எழுந்த செங்கதிரோன், தனது பொன்னிறக் கிரணங்களை எங்கணும் பரப்பி எல்லாப் பொருள்களின் மேலும் பொன் மூலாம்பூச முயல்பவனைப்போல் விளங்குகிறான். பலவகைப்பட்ட நிறங்களை உடைய அழகிய பறவைகள் பலவும், தமது கூட்டைவிட்டுப் புறப்பட்டு சிறகடித்துக்கொண்டே உற்சாகமாகப் பறந்து திரிந்து கொண்டிருக்கின்றன. காலை இளவெயிலில் விரிந்து மலர்ந்த பலவகை மலர்களிலுள்ள செந்தேனை உண்டு மதிமயங்கிய வண்ணம், பொன்னிறச் சிறகுகளை உடைய வண்டுகள் பலவகைப் பண்கள் பாடிப் பறந்து திரிந்து கொண்டிருக்கின்றன. மலர்களின் மெல்லிதழ்களில் படிந்து நறுமணமளைந்த குளிர்ந்த பூந்தென்றற் காற்று, மேன்மையாக வீசிக்கொண்டிருக்கிறது. அழகிய பூங்கொடிகள் படர்ந்திருந்ததொரு சின்னஞ்சிறு சிங்காரக்குடிசையின் வாயிலிலே, பறவைகளின் இறகுகளாலும் பலவகை மணிகளாலும் தன்னைச் சிங்காரித்துக் கொண்டு, இடையில் புலித்தோலும் முதுகில் புள்ளிமான் தோலும் அணிந்து கொண்டுள்ள சுமார் முப்பது வயது மதிப்புடைய வேடன் ஒருவன் அமர்ந்து கொண்டிருக்கிறான். அவனெதிரில், கம்பீரமான உடை உடுத்திய ராஜ சேவகன் ஒருவன் நின்றுகொண்டிருக்கிறான். அவ் வேட மன்னனின் அருந்தவப் புதல்வியின் பேரழகையும் சீரிய குணங்களையும் கேள்வியுற்ற ஒரு அரசனால், தனது பிள்ளைக்கு அப் பெண்ணைக் கொள்ளும் நோக்கத்துடன் எழுதிக் கொடுத்தனுப்பப்பட்ட திருமண ஓலையைக் கொண்டுவந்த தூதன் அவன். அவ் வேட மன்னனிடம் அத்திருமண ஓலையை அளித்த அத்தூதன், அரசன் சொல்லி யனுப்பிய செய்தியையும் கூறி நிற்கிறான். அச் செய்தியைக் கேட்டுக் கலகலவென்று சிரித்த அவ்வேட மன்னன், அரச தூதனை நோக்கிப் பின்வருமாறு கூறினான்:—

"நிகரற்ற வெற்றி வேந்தனாக தன்னை எண்ணிக்கொண்டு செருக்கு மிகுந்துள்ள அரசனது திருமுகத்தைக் கொண்டுவந்த தூதனே! அவனது 'திருமுக'த்தை நீ இங்கு கொண்டுவந்து விட்டதனால், அவ்விடத்தில் அவனது முகமில்லாத வெறும் முண்டம் மட்டுந்தானே இருக்கக்கூடும்! அத்தகைய முண்டத்துக்கா, எங்களது குலக் கொழுந்தாகிய மெல்லிய பூங்கொம்பையொத்த நல்லியற் செல்வியை மணம் செய்து கொடுக்கும்படி கேட்கத் துணிந்து வந்தாய்? கேவலம் அதிகாரத் திமிரினாலும் பணச் செருக்கினாலும் படை வலியினாலும் அம்மன்னன் எங்களது குலக் கொழுந்தாகிய கோமளப்

பெண்ணைக் கொண்டுபோய் விடலாமென்று எண்ணிக்கொண்டு விட்டானா என்ன? பலவகைப்பட்ட ஆடம்பரங்களுடன் நாட்டில் வாழும் அம் மன்னவன், இயற்கைத்தேவி வழங்கியுள்ள இணையற்ற செல்வங்களுடன் காட்டில் வாழ்ந்து வரும் எங்களைக் கேவலமாக எண்ணிக்கொண்டு விட்டானா என்ன? எங்களது குலம் எத்தகைய குலமென்பதை அம் மன்னன் அறிந்திலன் போலும்! இராமபிரானது திருவுள்ளத்திற்குப் பெரிதும் உகந்த இன்னுயிர்த் தோழராகிய குகப்பெருமான், அவதரித்த திருக்குலம் எங்கள் குலமென்பதை அம் மன்னன் மறந்து விட்டானா என்ன? "மன்னவர் நெஞ்சினில் வேடர் விடுஞ் சரம் வாயாவோ?" என்று வீர முழக்கம் செய்து நின்ற குகப் பெருமானின் வீரம் பொங்கும் இரத்தம், இன்னும் எங்களது உடலில் ஓடிக்கொண் டிருக்கிறதென்பதை உங்களது மன்னனுக்கு உணர்த்தக்கடவாய்! கேவலம் படைவலியின் துணை கொண்டோ பணப்பேயின் துணை கொண்டோ எங்களை இணங்கச் செய்து எங்களது செவியைக் கொண்டு போய் விடலாமென்னும் எண்ணம் உங்களது மன்னனுக்கு இருந்தால் அத்தகை எண்ணத்தை அவனது அகத்தினின்றும் அடியோடு அகற்றிக்கொண்டுவிடும்படி தெரிவித்ததாகச் சொல்லு.




நீ கொண்டு வந்தது உண்மையில் மன்னனது திருமுகமேயானால், அந்த திருமுகத்தில் இருக்கவேண்டிய வாய்—செவி—கண்—மூக்கு முதலிய அங்கங்களெல்லாம் எங்கு சென்று ஒளிந்துகொண்டு விட்டன? அவ்வங்கங்கள் எதுவுமில்லாத இதனை, திருமுகமென்று சொல்ல நீ எப்படி மனம் துணிந்தாய்? எங்களது குலத்தின் அரும் பெருஞ் செல்வமாக நாங்கள் போன்

புடன் வளர்த்துவரும் பூங்கொம்பைப் போன்ற எங்களது செல்வியை, அம் மன்னன் அழகிய அங்கம் எதுவுமில்லாமல் மரத்தைத் தழுவிப் படர்ந்து வளரும் உயிரற்றதொரு கொம்பாக எண்ணிக்கொண்டு விட்டானே என்ன? அவ்வாறு அரச மரத்தைத் தழுவிப் படர்ந்து வளர ஏங்கித் தவித்து நிற்கும் பூங்கொடி இவ்விடத்தில் எதுவுமில்லை யென்பதை அம் மன்னனிடம் போய்ச் சொல்லிவிடு.

அம் மன்னன் தனக்காகவன்றி, தான் பெற்று வளர்த்த தனது அருமைப் புதல்வனுக்காக எங்களது செல்வியைக் கேட்டனுப்பி யிருப்பினும், அதற்கும் இணங்க இப்பொழுது நாங்கள் சித்தமாக இல்லை. அரச குலத்திற் பிறந்து வளர்ந்த ஒரு இளவரசுக்கு, அவ்வினத்திற் பிறந்து வளர்ந்த ஒரு பெண் அகப் படாமற் போய்விட்டாளா என்ன? புதிதாக ஒரு பெண்ணைக்கொள்ள விரும்பு வோர் தங்களது குலத்திலேயே அப் பெண்ணைத் தேடிக்கொள்ள வேண் டுமே யன்றி மற்றொரு குலத்துப் பெண்ணைத் தேடிக்கொள்ள விரும்பு வது பொருந்தாது; முறைமையுமன்று. ஆதலின், உங்களது இளவரசுக்கு ஒரு பூங்கொம்பைத் தழுவியணைத்து முத்தமிட்டுக் கலந்து களிக்கவேண்டு மென்னும் மோகம் அடக்க முடியாதவாறு பெருகி விட்டிருந்தால், அவ் வினத்திற் பிறந்து வளர்ந்த ஆலமரத்தினிடம் சென்று நிலத்தில் ஊன்றி நிற்கும் அதன் விழுதாகிய கொம்பைக் கொடுக்கும்படி மணம்பேசி முடித் துக்கொள்ளுமாறு நான் சொன்னதாக உங்களது மன்னனிடம் போய்ச் சொல்லக்கடவாய்!

எங்களது குலக் கொழுந்தாக வளர்ந்து வரும் எங்களது செல்வியைத் தழுவியணைத்து மகிழத் தகுதி உடையவர் எவரென்பதை நாங்கள் நன்கு அறிவோம். அவ்விஷயத்திலே, எங்களுக்கு வேறு எவரும் எவ்வித யோச னையும் கூற வேண்டுவதில்லை; அவ்வாறு கூறினாலும் அதை ஏற்றுக்கொள் ளவும் நாங்கள் இப்பொழுது சித்தமாக இல்லை. எங்களது பூங்கொம்பைத் தாங்கித் தழுவி ஏற்று வாழத் தகுதி உடையவர், பொன் வண்டுகள் பல வகைப் பண்கள் பாடிப் பறந்து திரிந்து கொண்டிருப்பதும் நீல மயில்கள் தமது அழகிய தோகையை விரித்து ஆனந்த நடனம் ஆடிக்கொண்டிருப் பதும் கருமுகில்கள் தவழ்ந்து செல்வதும் மாங்குயில்கள் மதுரமாகப் பாடிக் கொண்டிருப்பதுமாகிய மனோகரமான மலர்ச் சோலையி னிடையிலே, அர வணைமேல் பள்ளிகொண்டு கிடக்கும் திருவரங்கப் பெருமான் ஒருவரே ஆவர். இரண்டாறுகளின் இடையிலே அரவணைமேல் சாய்ந்து கிடக்கும் ஒப்புயர் வற்ற மரகத மலையைத் தழுவி மகிழ்வதற்காகவே வளர்ந்தும் வரும் எங் களது குலக்கொழுந்தாகிய சுந்தரியிடம், பகைவர்களின் வருகையை எண்ணி எண்ணிப் பயந்துகொண்டிருக்கும் உங்களது மன்னன்மகன் மையல் மிகுந்து நிற்பதால் என்ன பயன்?

எங்களது பெண்ணை மணம் பேசுவதற்காக மன்னனால் அனுப்பப்பட்டு வந்து நிற்கும் தூதனே! நீ கொண்டுவந்த ஓலையாவது மங்களகரமாக—தனது அழகு குலையாமல்—இருக்கிறதா என்ன! இவ்வோலையிலே, என்னென்ன வெல்லாமோ கிறுக்கி யிருக்கிறதே! அடடா! இந்த ஓலையை மெல்ல மெல்ல செல்லரித்துத் தின்ன முயன்றிருப்பது போலல்லவா காணப்படுகிறது! செல்லரித்து விட்டதொரு ஓலை, எவ்விடத்திலேனும் செல்லுவதும் உண்

டோ? செல்லவல்ல தல்லாததொரு ஓலையை மோகப் பெருக்கினால் மதி யிழந்த மன்னன்தான் கொடுத்தனுப்பி யிருந்தாலும், அதை என்னிடம் கொண்டுவந்து கொடுக்க நீதான் எப்படி மனந் துணிந்துவிட்டாய்? செல்லரித்துச் செல்லாமற் போனதொரு ஓலையை, மண ஓலையாகக் கருதி ஏற்று மகிழக்கூடிய வவ்வளவு அறிவற்ற பேதைகளா நாங்கள்?

எங்களது அருந்தவச் செல்வி சிறு குடியிற் பிறந்து வளர்ந்தவளே யெனினும், அதனாலேயே அவளது அறிவுங்கூட சிறுமை யடைந்து விட்டதா என்ன? எங்களது உடலில் உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரையில் இன்னமும் வீர ரத்தம் ஓடிக்கொண்டிருப்பது வீணாய்ப் போய் விடுமா என்ன? வீரக் குலத்திற் பிறந்து—வீரத் தாயின் பாலருந்தி—வீர விளையாட்டு களையே விளையாடி வீரக்குடியில் வளர்ந்து வந்த வீரமங்கையாகிய எங்களது செல்வியின் மனம், எவருக்குமே சற்றும் அஞ்சாதவனும் எவரையும் எளிதில் அடக்கி ஆள வல்லவனுமாகிய சீரிய வீரன் ஒருவனையே நாடி நிற்பது இயல்பேயன்றோ? "அன்னம் ஊட்டிய தெய்வ மணிக்கையின் ஆணை காட்டிய அனலை விழுங்குவோம்!"—என்றவாறு, தான் காதலிக்கும் ஒருத்தியின் கையைப் பிடிக்கும் முன்பே, அவள் பொருட்டு எத்தகைய அபாயகரமான வீரச்—செயலையும் செய்யப் பின் வாங்காத நெஞ்சத்திண்மை உடைய சீரிய வீரனேயன்றோ, உத்தம வீர மங்கையின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளக்கூடிய சக்தி உடையவன்! அன்பின் மிகுதியினால் அஞ்சி ஒடுங்கி நின்ற நப்பின்னைப் பிராட்டியின் கண்கள் மகிழ்ச்சிப் பெருக்கினால் புத்தழகு பெற்று மலர்ந்து விரிந்து வீர ஒளி வீசிக் கூரிய வேலிணையைப்போல் தன் மேல் பாய்ந்து வரக்கூடியவாறு, கொடிய எருதுகள் ஏழையும் செருக்கடக்கிச் சிரித்து நின்ற கண்ணபிரானிடமே எமது அருந்தவப் புதல்வியும் இன்று மனம் செலுத்தி நிற்கிறாள்.

அத்தகைய வீர நாயகனாகிய கண்ணபிரானே, 'கண்டவர் சிந்தை கவரும்' கட்டழகிற் சிறந்த திருவுருவத்துடன் கூடியவனாய் திருவரங்கப் பெரு நகரில் இன்றும் நம்பெருமாளாகக் காட்சி யளித்து நிற்கிறான். வில்லி புத்தூர்ச் செல்வியாகிய ஆண்டாளையும் உறையூர்ச் செல்வியாகிய கமலவல்லி யையும் கைப்பிடித்து மணந்துகொண்டு இன்றும் அம் மணவாளத் திருக் கோலத்துடனே அழகிய மணவாளப் பெருமாளாக அன்பர்களுக்கு சேவை சாதித்து நிற்கும் திருவரங்கச் செல்வனாது திருவடிகளிலேயே, எங்களது செல்வி காதல் மிகுந்து கனிந்த சிந்தையளாய் நெஞ்சு கரைந்து உருகி நிற்கின்றாள். எல்லா உலகுகளிலுமுள்ள எல்லா வீரர்களுக்கும் தனிப்பெருந் தலைமை பூண்ட ஒப்புயர்வற்ற வீரர் குலத் தெய்வமாக விளங்கும் நம்பெருமாளது திரு வடிகளை வருடி மகிழ ஆர்வம் மிகுந்து நிற்கும் எங்களது செல்வியை—அவ் வீர நாயகன் ஒருவனையே தனது மனக்கோயிலில் எழுந்தருள்வித்து இரவும் பகலும் இடையறாமல் பூசித்துவரும் எங்களது சுந்தரியை-என்றும் எதற்கும் எவருக்கும் அஞ்சாத ஒப்புயர்வற்ற வீரன் ஒருவனையே தனது துணைவனாக ஏற்று மகிழவேண்டுமென்பதொன்றையே தனது வாழ்க்கையின் நோக்கமாகக் கொண்டு நிற்கும் எங்களது குலக்கொழுந்தை, சின்னஞ் சிறியதொரு அரசுக்கு உரிமை பூண்டு—அதையும் மற்ற மன்னர்கள் எப்பொழுது படையெடுத்து வந்து பிடுங்கிக்கொண்டு விடுவார்களோ என்று எப்பொழுதும் பயந்து கொண்டிருக்கும் குறுநில மன்னர்கள் இச்சைப்படுவது, அந்தணர்களால் மந்திர

வேள்வியில் அமரர்களுக்காக அளிக்கப்படும் அவியுணவை எச்சிலிலை தின்று தெருவில் திரியும் ஈன நாய் விரும்புவதைப் போலாகு மல்லவா?

மதியற்ற மன்னனின் ஏவலைக் கேட்டு என் எதிரில் வந்து நிற்கும் பேதைத் தூதனே! எங்களது சிறு குடிசைக்குள் தங்கியிருக்கும் எங்களது குல விளக்காகிய செல்வியின் வடிவம் சிறிதேயாயினும், அக் குலவிளக்கின் அழகொளியும் அறி வொளியும் குண ஒளியும் இச்சிறு குடிசிலில் மட்டும் கட்டுப் பட்டிராமல் காடு கடந்து நாடடைந்து பல விடங்களிலும் பெரிதும் பரவி விட்டிருக்கின்றன. அவ்வொளிகளினால் கவரப்பட்ட கருத்தினராகிய எண்ணிறந்த மன்னர்கள், தங்களது தோள் வலியினாலும் படைத் துணையினாலும் எங்களை எளிதில் வென்று எங்களது குடிசையில் ஒப்பற்ற அற்புதப் பேரொளி வீசி நிற்கும் அருள் விளக்கைக் கவர்ந்துகொண்டு போய் விடலாமென்னும் எண்ணததுடன் இங்கு வந்து எவ்வளவு பாடு பட்டுப் போய் விட்டார்கள் தெரியுமோ? அவர்கள் இங்கு வந்து எத்தகைய கதிக்குள்ளாயின ரென்பதை நான் எனது வாயினால் கூற விரும்பவில்லை. இப்பொழுது உனது இரு கண்களும், உனக்கு இன்னும் சொந்தமாகவே இருககின்றன வல்லவா? அந்த இரு கண்களைக்கொண்டே, இக் குடிசையைச் சுற்றிலுமுள்ள எல்லார் குடிசைகளையும் நன்றாக உற்றுப் பார். உனது கண்களுக்குப் புலனாகும் காட்சிகளே, இங்கு வந்து எங்களை எதிர்த்து நிற்கத் துணிந்த மன்னர்கள் என்ன கதியடைந்தன ரென்பதை நன்கு உணர்த்தக்கூடும்.

அதோ பார்! அந்த குடிசைகளின் வாசலில் வைத்து மூடப்பட்டிருப்பவை எவை தெரியுமா? ஐயோ, பாவம்! அவைதான், தங்களது தோள் வலியையும் படைத்துணையையும் நம்பி வந்து எங்களை எதிர்த்து நிற்கத் துணிந்த மன்னர்கள் மிக மிக ஒய்யாரமாகப் பிடித்துக்கொண்டு வந்த அழகிய பூச் சக்கரக் குடைகள்! கொஞ்ச காலத்திற்கு முன்னர், அழகிய சிங்காசனத்தின்மீது அம் மன்னர்களின் தலைமேல் கம்பீரமாகச் சுழன்று கொண்டிருந்த அழகிய வேலைப்பாடுகள் அமைந்த விலையுயர்ந்த வெணபட்டுக் குடைகள், இப்பொழுது எங்களால் எங்களது சிறு குடிசைகளின் குறுகிய வாயிலை மூடுவதற்கு உரிய சிறு படல்களாகப் பயன்படுத்தப் பட்டு வருகின்றன. அதோ பார்! சிற்சில குடிசைகளின் வெளியிலே, பலவகைப்பட்ட அளவுடைய அழகிய மணி முடிகள் காணப்படுகின்றனவல்லவா? அவை எங்களுக்கு எப்படிக் கிடைத்தன தெரியுமோ? விற்போரில் எங்களை எதிர்த்து நிற்கப் போதிய சக்தியின்றி—உயிரைக் காத்துக்கொள்ளும் ஆசை மிகுந்து—புறமுதுகிட்டு வந்த வழியே திரும்பி ஓடிப்போய்விட்ட மன்னர்கள், தாங்கள் ஓடிய ஓட்டத்தின் அவசரத்தில் நிலததில் விழுந்துவிட்ட மணி முடிகளை எடுத்தணியவும் துணிவில்லாததவர்களாய் அவற்றை இங்கு விட்டுவிட்டுப் போய் விட்டார்கள். பலவகைப்பட்ட சிறந்த மணிகள் இழைக்கப்பட்டு மிக அழகாக விளங்கும் அந்த மணி முடிகளைத் தான், நாங்கள் இப்பொழுது தினை முதலிய தானியங்களை அளப்பதற்கு உரிய படிகளாகவும் மரக்காலகளாகவும் பயன் படுத்திக்கொண்டு வருகிறோம். மன்னர்களின் தலையில் விளங்கிய மணி முடிகள், இப்பொழுது இங்கு மரக்கால்களாகவும் படிகளாகவும் விளங்கும் விநோதக் காட்சியை உற்றுப்பார். அக் குடிசைகளின் மேல் வெள்ளை வெளேரென்று சில பொருள்கள் காணப்படுகின்றன வல்லவா?

அவற்றை, நீ என்னவென்று நினைக்கிறாய்? எங்களை எதிர்த்து வந்த மன்னர்களுக்கு, சிற்சில சேவகர்கள் வெண்சாமரம் வீசிக்கொண்டு வந்தனர். எங்களது வீர வில்லின்முன் எதிர்த்து நிற்க முடியாமல் அம் மன்னர்கள் தமது உயிருக்குப் பயந்து ஓட்டமெடுக்கவே, அச் சேவகர்களும் தாங்கள் பிடித்திருந்த வெண்சாமரங்களை எங்களது குடிசைகளின்மேல் வீசி எறிந்து விட்டு ஓடிப்போய் விட்டனர். அன்றுமுதல் இன்று வரையில், அச் சாமரங்கள் எங்களது குடிசைகளின் கூரைகளில் அப்படியே கிடக்கின்றன. அதோ அந்த வேலியைப் பார்! அந்த வேலி எவற்றினால் அமைக்கப்பட்டது, தெரியுமோ? எங்களை எதிர்த்து நிற்கச் சக்தியற்று தோல்வியடைந்து திரும்பி ஓடிப்போய்விட்ட மன்னர்கள், கீழே போட்டுவிட்டுப் போய்விட்ட வில்—வாள்—வேல் முதலிய ஆயுதங்களைச் சேகரித்து, அவற்றினாலேயே நாங்கள் அந்த வேலியை அமைத்திருக்கிறோம்! நீ திரும்பிப் போய், உன்னைத் தூது விட்ட மன்னனிடம் இவற்றையெல்லாம் விவரமாகக் கூறு. எங்களது குலவிளக்காகிய செல்வத் திருமகள் செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார் ஒருவருக்கே உரிமை உடையவளாதலின், அவளை அடையும் ஆசையை வேறு எவர் கொள்வதிலும் எவ்வித பயனுமில்லை யென்பதை தெளிவாகத் தெரிவித்துவிடக் கடவாய்.''

(இக் கட்டுரை, திவ்விய கவி பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் இயற்றிய திருவரங்கக் கலம்பகத்தி விருப்பனவும்; நகைச்சுவையும் வீரச் சுவையும் கலந்தனவும்; 'மறம்' என்னும் உறுப்பைச் சேர்ந்தனவுமாகிய "கொற்ற வன்றன் திருமுகம்"; "பேச வந்த தூத!"—எனும் இரு சீரிய கவிகளின் கருத்தை ஆதாரமாகக்கொண்டு எழுதப்பட்டதாகும்.)




# ஒளவையார்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

மாற்றானுக் கிடங்கொடேல் என்பது அடுத்த நீதி. இதற்கு நீ பகைவனுக்கு (உன்னை நெருக்கிப் பின் வருத்தும்படியாக) இடங் கொடாதே என்று உணர்த்துவதாகும். மோசத்தாலாவது தனது எதிரியைத் துன்புறுத்தும் கருத்தைக்கொண்டும் சிலர் முயல்வதுண்டு. நேர்நின்று பகையை வெளியிடுவோர்கள் சுத்த வீரர்களாவர். உள்ளொன்றுவைத்துப் புறத்தே உண்மையாளர்போல் நடிப்போர் பெரும் பாதகர்களாக எண்ணப்படுவர். இதனிலும் இழிவு பிறிதில்லை. இதனைத் திருக்குறளாசிரியர் மிக அழுத்தமாகக் கண்டித்துள்ளார். "வாள்போற் பகைவரை அஞ்சற்க அஞ்சுக, கேள்போற் பகைவர் தொடர்பு" என்றருளிய தொன்றே போதும். எக்காரணம் கொண்டும் பகையுடையாரோடு நம்பி அளவளாவுதல் தவறு. இராவணன் தனது தங்கையான சூர்ப்பநகையின் கணவனை மைத்துனனென்றும் பாராது போரிற் கொன்றான். அந்தப் பகையை மனதில் அடக்கிக்கொண்டு நெடுங்காலம் காத்திருந்து சீதையின் மூலம் போர் விளைத்து இராவணன் குடியைப் பூண்டோடு அழித்தாள் சூர்ப்பநகை என்னும்அவ்வரக்கி. இதுபோன்ற உதாரணங்கள் பல. பெரிய புராணத்தில் மெய்ப்பொருள் நாயனார் முடிவு இதற் குதாரணமன்றோ? பகைவனிடம் நெருங்கிப் பழகாவிடினும் பகைவனுக்கு வேண்டிய நண்பரிடமும் நெருங்கிய நட்புகொள்ளல் தவறு; நெருங்கிப் பழகினால் தனது இரகசியங்களை வெளியிட சமயம் ஏற்படும். அவைகளே இவனுக்குப் பெருந் தீங்கை விளைக்கத்தக்க கருவியுமாகும். ஆதலினால் மாற்றான்பலம் உயரும்படி அவனுக் குரியோரிடமும் நீ இடங் கொடுத்துப் பேசாதே என்றருளினர். இனி மாற்றானுக் கிடம் கொடுத்து அவரால் நன்மை யெய்தியவர் இராமபிரான் என்று கூறுவர். உண்மையில் விபீடணன் மாற்றானுடைய சகோதரனேயாயினும் மாற்றானல்லன். மாற்றானாயினும் அவனையும் கீழ்ப்படியச் செய்யும் அறத் துறையாற்றல் உடையவர்கட்கு அச் செயல் புகழே தரும். இதனைக் கம்பநாடார் இராமபிரான் வாக்காக,

"இன்று வந்தா னென்றுண்டோ
எம்பியை யாயை முன்னைக்
கொன்று வந்தா னென்றுண்டோ
புகலது கூறு கின்றான்

தொன்று வந்தன்பு மாறுத்
துணைவனும் அவனே பின்னைப்
பின்னு மென்றாலும் நம்பார்
புகழன்றிப் பிறிதுண்டாமோ."

என விபீஷணன் அடைக்கலப் படலத்திற் கூறியுள்ளார். இரும்பையும் பொன்னாக்கும் இயல்புடைய பரிசவேதிபோல விளங்கும் பெரியார்க்கு அரிய தொன்றில்லை. அதற் குதாரணமாக ஒரு கதையும் உண்டு.

ஒரு வனத்தில் தவச்சாலை யமைத்துத் துறவி யொருவர் இருந்தனர். அவ்விடத்து உணவின்றி மெலிந்து வாட்டமுற்ற ஒரு நாய் வந்து முனிவர் கண்களிற் படும்படி அவர் ஆசிரம வாய்தலில் நடக்க முடியாமல் சோர்ந்து ஏதேனும் உணவு தரும்படி கேட்பதுபோல முக நோக்கி நின்றது. அதன் நிலைமை அவருக்குப் பரிதாபத்தை யுண்டுபண்ணவே மனமிரங்கித் தன்னுணவில் ஒருபாகம் அளித் துதவினர். அதனை யுண்ட சுணங்கன் ஆசிரம வாய்தலை விட்டகலாமல் அவர் இருந்தாலும் இல்லாதிருப்பினும் நன்றிக் கறிகுறியாகக் காவல் புரிந்து வந்தது. முனிவரும் கருணையால் தினமும் தனது ஆகாரத்திற் பாதி அதற்களித்து வந்தனர். வரவர நாய் மெலிவகன்று வன்மையடைந்து திடம் பெற்றது. முனிவர் பெருமானின் கடாட்சத்தால் பேசும் திறமையும் பெற்றது. அதன்மேல் அந்நாய் தனது இழிவான பிறவிமாறி உத்தமப் பசுவாக மாறும்படி முனிவரைக் கோரியது. அவரும் அவ்வாறே யாகுகவெனக் கமண்டலநீரைத் தெளித்தார். நாயும் பசுவாக மாறியது. பின்னர் இந்நாய்ப் பசுவுக்கு அவ்வனத்தில் சஞ்சரிக்கும் புலிகளால் அச்சம் அதிகரிக்கவே அதனைத் தவிர்க்க வேண்டி மீண்டும் முனிவரை வணங்கி இப் பசு வடிவத்தில் வேங்கை முதலிய விலங்குகளால் எப்போதும அச்சமும் அபாயமும் இருப்பதால் தன்னை எதற்கும் அஞ்சாத வேங்கையாக மாறும்படி செய்யும்படி கோரியது. அவரும் அவ்வாறே யாகுகவென முன்போல மந்திர நீரை இறைத்தனர். உடனே தவமுனியின் பெருமையால் நாய்ப்பசு பதினறடி வேங்கையாக மாறியது. இங்ஙனம் சில நாளிருக்கையில் வேங்கைக் கியல்பான கொடுங்குணங்களும் பெற்று ஒருநாள் அத் தவராஜன் தியானத்திலிருக்கையில் அவர் மேற்பாய்ந்து அவரைக் கொன்று உணவாக்கிக் கொள்ளத் துணிந்து முற்பட்டது. அஃதுணர்ந்த பெரியார் "என் பழைய நாயே" என்றனர். அதே கணத்தில் வேங்கையுருவமும் ஆண்மையும் வேகமும் மாறிப் பழைய நாயாக மாறிவிட்டது. நாய் வெட்கித் தனது இழி குணத்திற்கு வருந்தி எல்லாத்திறமும் இழந்து முன்போல் அலையத் தலைப்பட்டது. அத்தகைய பெரியார்க்கே மாற்றானுக் கிடங்கொடுத்தாலும் அதனால் விளையும தீங்கைத் தடுத்துக்கொள்ள முடியுமன்றி சாதாரண மாந்தர்க்கு இயல்வதன்று. ஆதலினால் மூதாட்டியார் மாற்றானுக் கிடங்கொடேல் என்று கண்டிப்பாக உணர்த்தினர்.

இனி "மிகைபடச் சொல்லேல்" என்பதாகும். இதற்கு சொற்கள் அதிகப்படும்படி நீ வசனியாதே; சுருக்கமாகப் பேசு என்பது பொருள். இத்திறம் பெரும்புலமை வாய்ந்தவர்களில் சிலரிடம் வாய்ப்பின்றி யிருப்பது உண்டெனில் சாமானியர்களிடம் எதிர்பார்ப்பது எளிதன்று. ஆயினும் சிற்சிலர் அதிகப் படிப்பில்லா நிலையினும் சொற்களை சுருங்கப் பேசுவதில்

கவனமுள்ளவர்களா யிருக்கின்றனர். வார்த்தை குறையக் குறைய வாதம் குறையும். சொல்லுக் குறைந்தால் மல்லுக் குறையும் என்பவைகள் அனுபவப் பழமொழி. அனுவசியமாக ஒரு கேள்விக்கு அதற்குச் சம்பந்தமில்லாத பத்து விஷயங்க ளடங்கிய பதில் அளிப்போர் பலரைக் காண்பது சர்வ சாதாரணம். இதில் பெண்களே பேர்போனவர்கள் என்பது பல ஆடவர்கள் தீர்மானம். ஆடவர்களிலும் பலர் உண்டென்ப துண்மை. பல கேள்விகளுக்கு ஒரே வார்த் தையில் விடை யளிக்கும் மாதர்களுமுண்டு. அறிவுள்ள பெண்டிர்க்கு இத் திறமை மிக அதிகம் என்பதற்கு நமது தமிழ்ப்போராசிரியையாகிய மூதாட்டி யாரே ஒப்பற்ற உதாரணமாவர். பதினென்கு சீர்க்கழிநெடில் பாடியும் தங் கருத்தை நன்கு வெளியிட முடியாது குளகம் போடும் பெரும் புலவர்களின் கருத்தை அரைவரியில் அடக்கிக்காட்டும் ஆற்றலுடையவர் நமது ஔவை யார். அவர் இத்தகைய புத்திமதியை எடுத்துக்கூறியது மிகவும் அழகுடை யதே. நம் நாட்டில் சோதிடத் தொழிலில் ஈடுபட்டிருப்போர் பலர். எல்லாக் கலைகளையும்விட சோதிடக்கலை அதிக நுண்ணறிவும் கலங்காமூளையும் கணி தத்திறமும் உள்ளவர்களுக்கே பலிதப்படுமென்பது திண்ணம். எல்லோரும் அத்தகைய அருந் தகுதியுடையவர்களா யிருத்தல் முடியாதென்பது தெரிந் ததே. ஜீவனம் இதுவா யிருப்பதுபற்றி அவர்கள் தமக்குள்ள சந்தேகங்களை வெளியிடவு முடிகிறதில்லை. இவ்வினத்தாரில் சிலர் நல்ல வருமானம் அடை கின்றனர். உண்மைக் காரணம் சோதிடம் கேட்க வருவோர்கள் பெரும் பாலும் தங்கள் தங்களுக்குள்ள எல்லாக் குறைவுகளையும் இராசி சக்கிரம் வரையு முன்பே அடுக்கடுக்காகச் சொல்லி விடுவர். பிறகு சோதிடனுக்கு வேலையே மிகக் குறைவு. விவேகமுள்ள சோதிடன் எளிதாகத் தன் தொழி லில் கீர்த்தி பெறுவதற்கு மக்கள் மிகைபடப் பேசும் பழக்கம் உள்ளவராக இருப்பதே அதிக ஆதரவு தருவதாகும். சிலர் சோதிட மென்பது நொடிக் கணக்கில் ஆராயக் கூடியதாகத் தமக்குள் எணணிக்கொண்டு தங்கள் சாமர்த் தியத்தைக் காட்டி சோதிடனைப் பரீக்ஷை பார்ப்பதுபோல சொல்ல முடியாத (அதாவது ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்ட) கேள்விகளைக் கேட்பது மிகுதி; இது மிகவும் வருந்தத்தக்க விஷயம். போலி மந்திரவாதிகள் பலர் பிழைப்பதும் மிகைபடக் கூறும் பேதமை மாந்தர்களாலேயே யென்பது நன்கு அநுபவ முள்ளார்க்கு விளங்கும். இவைகளின்றி சாதாரண சம்பாஷணைகளில் கூட விரிவுறப் பேசும் இயற்கை பலர்பால் உண்டு. உதாரணமாக ஒரு பள்ளி மாணவன் ஆசிரியரின் வீடு தீப்பற்றி எரிந்தது கண்டு அவ்விபத்தை அவ் ரிடம் விரைந்து சென்று தெரிவிக்க வேண்டினவனுய் முறைப்படி அவர்பால் வணக்கம் தெரிவித்துப் பிறகுதான் அவ்விடம் போக நேர்ந்த வேறு கார ணத்தை முதலில் கூறி பின்னர் போகையில் வழியில் ஏற்பட்ட இடை யூறை விளக்கிப் பிறகு புகை காணப்பட்டதும் அதை யறியத் தான் சென்ற தும், அனல் பிறர் நெருங்க வொட்டாமல் ஜுவாலை வீசியதும் தான் பயந்து திரும்பி வந்ததாயும் அதனை ஆசிரியரிடம் சொல்லாமல் போவது சரி யல்லவென்று விவரிப்பதாயும் கால்மணியில் சாவதானமாய்ச் சொல்லியதாக ஒரு கதை நம்நாட்டில் முதியோர் சொல்லுவ துண்டு. மாணவன் அறிவித்து முடியு முன் அக்கினியும் அவிந்து விட்டதாகச் சொல்லாமலே வாசகர்கள் உணரலாம். இத்தகைய அசந்தர்ப்பமான மந்தம் பிள்ளைகளிடம் தான் இருப்ப தாகச் சொல்லுவதற்கில்லை. பட்டதாரிகளாகி நீதி மன்றங்களில் நியாய வாதம் புரியும் நிபுணர்களிலும் பலர் சுருக்கமாகக் கூற முடியாமல் வளர்த்திப் பேசி

நீதிபதிக்குப் பெரும் கஷ்டத்தை விளைவிக்கின்றனர் என்பதுண்மை. தமிழ் உபந்நியாஸ மேடைகளில் தங்கள் கடமையின் அருமை பெருமைகளை யுணராமல் ஆசையினால் ஈடுபடும் சிலரிடமும் இக்குறை மிகுதியும் காணப்படுவதுண்டு. தாங்கள் சொல்லுவது இன்னதெனத் தமக்கே தெரியாமல் நேரத்தைச் சரிக்கட்ட கேட்போர் விரும்பக் கூடாதவைகளை வெளியிடுவோருமுண்டு. கூட்டங்களுக்குத் தலைமை வகிப்போர்க்குள்ள கஷ்டம் இத்தகைய சமயங்களில் செப்பத் தரமன்று. கம்பநாடர் தானியற்றிய இராமாயணத்தில் அநுமனையே இத்திறமைக்கேற்ற உதாரண புருடனாகக் காட்டி யுள்ளார். இவ்வரிய திறமையை அவர் விஷயம் வரும் ஒவ்வோரிடங்களிலும் வெகு பொருத்தமாக அமைத்துள்ளார். அவைகளை விவரிப்பது ஈண்டு இயல்புடையதன்று; எனினும் உதாரணமாக இரண்டொன்றைக் குறிப்பிடலாம்.

விபீஷணனை அடைக்கலமாக ஏற்கலாமா என்ற கேள்விக்கு,

"ஆவத்தில் வந்தபயம் என்றானை அயிர்த்தகல விடுதியாயின்
கூவத்தின் சிறுபுனலைக்கடல் அயிர்த்த தொவ்வாதோ கொற்றவேந்தே"

என்றும்,

பிராட்டியைக்கண்ட நற்செய்தியைத் தாசரதிக்கறிவிக்கச் சென்றதும்,
"கண்டனன் கற்பினுக் கணியை."

என்றும் நிறைந்த பல கருத்துக்கள் உள்ளவைகளே போதியதாகும். இது பற்றியே கவி பிறிதோரிடத்தில் மாருதியைச் 'சொல்லின் செல்வன்' என்று போற்றி யிருக்கின்றார். ஆதலின் ஔவைப்பிராட்டியாரும் சுருங்கக் கூறும் வன்மையை ஒவ்வொருவரும் பயில வேண்டுமென்று வற்புறுத்த வேண்டி மிகைபடச் சொல்லேல் என்றருளினர். சுருங்கச் சொல்வதே சொல்லின் செல்வமென்பது போதரும். அவ்விதம் கூறாமையால் தீமையும் விளையுமாதலால் அதனை முதன்மையாகப் படிக்கும் இளைஞர் உட்கொள்ள அநுகூலமாக மிகைபட என்னும் மொழியைக் குறிப்பாக அமைத்தனர் போலும். மிகை யென்பதற்கு குற்றம், கேடு, துன்பம், மிகுதி என்பதாகப் பொருள். தேவைக் கதிகமாகச் சொற்களை வழங்குவதால் தீமையும் விளையும் ஆதலால் பெரியார் மிகை என்பதையே முந்திப்பெய்தார் என்றுட்கொள்ளுதல் வேண்டும்.

இனி "மீதூண் விரும்பேல்" என்னும் நீதி. இதனைத் தாய்மார்களே முதன்மையாகக் கருதவேண்டுவது அவசியம் என்பதை மறுப்பார் இரார். வயதுவந்த பின்பும் தேவைக் கதிகமான உணவுகளைச் சபலத்தினால் உண்போர் சிலரும் இளமையில் அவர் தம் தாய்மார்களின் வளர்ப்பு முறையில் ஏற்பட்ட பயிற்சியினாலேயே கெட்டவர்க ளென்பது விளங்கும். பொதுவாக இந்தியத் தாய்மார்களுக்கே தத்தம் குழந்தைகள் அதிகம் புசிப்பதில் பரம திருப்தி. குடலுக் கொவ்வாத தின்பண்டங்களை அவர்களுக்கு பலவந்தமாக வாவது திணித்துவிட்டு மறுநாள் பேதிக்குக் கொடுப்பதற்குப் பின் வாங்காத தாய்மார்கள் பற்பலர். வீட்டிலுள்ள ஓரகத்தி நாத்தி இவர்கள் குழந்தைகள் பங்கு அதிகப்படாமலிருக்கும் பொறாமை யுணர்ச்சியினாலேயே மேற்கண்டபடி உண்பிக்கும் தாய்மார்களும் பலர். பெண்கள் எந்த வித்தையைக் கற்காவிட்டாலும் தாமும் மிதமாகப் புசித்து குழந்தைகளுக்கும் மிதமாக ஒழுங்காக குற்றமற்ற உணவுகளை உண்பிப்பதில் நோயைத் தடுக்கலாம்

என்னும் உண்மைக் கல்வியைக் கற்றிருக்கவேண்டும் என்பது குடும்ப அநுபவம் உள்ளவர்களுக்கு நன்கு தெரியும். இதுவன்றித் தாய்ப்பாலையே முக்கிய ஆகாரமாகவுடைய இளம் சிசுக்களை யுடைய தாய்மாரில்கூட ஒரு சிலர் அச் சிசுக்களுக்கு நோய் வருமென்று தெரிந்தாலும், தமக்குள்ள சுவைப்பித்தினால் கேட்டை விளைவிக்கும் சிற்றுண்டிகளையும் எளிதில் ஜீரணிக்க முடியாத மோட்டா வஸ்துக்களையும் அமிதமாக உண்டு தமது பாலின் வழி அக் குழந்தைகளை வியாதிக்குள்ளாக்கும் பேயொத்த பெண்களும் நம்மிடை இல்லாமலில்லை. ஆணும் பெண்ணும் இதர விஷயங்களில் ஒரு வண்டியிற் பூட்டிய இரு எருதுகளைப்போல் சமமாகப் பாவிக்கப்பட்டாலும் மகப் பேற்றினால் பெண்களுக்கு இயல்பாக ஏற்படக்கூடிய சுயநல தியாகம், கனிந்த அன்பு, சகிப்புத்தன்மை இவைகளே ஆண்களினின்றும் பெண்கள் தரத்தினை யுயர்த்துவதாகும். தந்தைக்கும் தந்நலத்தைவிடத் தநயன் நலம் பெரிதெனவே மனதிற் படுமாயினும், தாயைப் போலச் செய்நலம் கருதிக் கடுமையான பத்தியங்கள் இருக்கவும், மல ஜலாதிகளை அருவருப்பின்றி அகற்றவும் தூக்கமின்றிப் பாதுகாக்கவும் ஒருபோதும் முடியாது. இதுபற்றியே அன்னையும்பிதாவு முன்னறி தெய்வம் என்றும் மாதுரு தேவோ பவ என்றும் அருளப்பட்ட சுருதிகளெல்லாம் தாய்த்தரத்தின் உயர்ச்சியையே காண்பிப்பதாகும். இன்றும் மேல்நாடுகளில் அதிக மக்களைப் பெற்ற தாய்மார்களுக்கு நன்கொடைகளும் பெரும் சிறப்புகளும் தரப்படுகின்றன. அத்தகைய பெருந் தகுதிக்குரிய தாய்மாரே சுவை யடக்கம் அற்றவரா யிருப்பது எவ்வளவு இழிவு. தாம் மக்கள் நலம்பேணும் இயல்புடையவர்களா யிருந்தும் சீரான உணவூட்டத் தெரியாமல் பிள்ளைகள் வயிறு புடைக்கும்படிக் கதை சொல்லியாவது உண்பித்து டாக்டர் உதவியைத் தேடுவது எவ்வளவு பேதமை. இதே பயிற்சிக் குள்ளாகும் பிள்ளைகள் வளர்ந்து பெரியவர்க ளானாலும் மீதூண் விரும்பும் பழக்கத்தை விடமுடியாதவர்க ளாகின்றனர். தாயின் உதவியின்றியும் தாமாகவே இத்தகைய கலையில் விற்பன்ன ராவோர்களும் சிலர் இருக்கலாம். அவர்களுக்கு நேர்முகமான உபதேசமாக மீதூண் விரும்பேல் எனப் பெரியார் கூறியதாக உணர்தல் கடன். தாய்மார்கள் மீதூண் விரும்புவது தமக்கும் தமது மக்களுக்குமாக இரண்டிடங்களிலும் கெடுதியை விளைவிப்ப தாதலினால் தாய்மார்களை நோக்கிக் கூறியதாகக் கருதுதல் மூதன்மை வாய்ந்ததெனமுதலில் குறிப்பிட்டதும். இனி இம்மைப் பயனைக் கருதாது மறுமை நாட்டமுள்ளவர்களுக்கு உணவில் கட்டுப்பாடு இவர்களைவிட அவசியம் வேண்டற்பாலது உடல் நோய்வாய்ப் படாத முறையில் ஓம்ப வேண்டுவது அத்துறவிகட்கும் தலைக்கடனே. ஆனால் அறவே உண்டியைத் துறத்தலும் தவம் கைகூடச் செய்யும் நன் முயற்சிக்கேற்ற தாகாதென்பது அறிஞர் துணிபு. தெய்வப்புலவரும் இதை வற்புறுத்தி 'மிகினும் குறையினும் நோய் செய்யு'மென்று கூறி யருளினார். உடல் நலம் கெடுவது இம்மை முயற்சி மறுமை முயற்சி இரண்டிற்கும் பெருந்தடை. உடல்நலம் மீதூண் புசிப்பால் பெரிதும் விளைவது. அவ்வண்ணம் புசிப்பதற்குக் காரணம் சுவை விருப்பமே யாகும். ஆதலினால் நமது அன்னையார் மிகுதியான உண்டியை நீ உண்ணாதே என்று கூடக் கூறாமல் விரும்பாதே என்று எச்சரிக்கை செய்தார். விருப்பம் எழுமேல் ஒருபோதும் அதனைத் தடுத்தல் எவர்க்கும் அரிது. உண்மை ஞானிகளுக்கே அத்தகைய திடசித்தம் வர முடியும். அவர்களையும் ஒரோர் சமயம் இச்சையானது வெற்றி கொள்ளும் எனில் சிறு

# ஆபுத்திரன் வரலாறு

(பே. ராமாநுஜம்.)

## 3. தவமங்கையும் தருமராசனும்

மாலைப்பொழுது. பகலவன் பொன்னிறக் கதிர்களால் உலகத்துப் பொருள்கள் அனைத்தையும் தன்னிறமாக்குகிறான். தென்றற்காற்று மல்லிகை முல்லை முதலிய மலர்களின் மணங் கவர்ந்து மெல்லென வீசுகிறது. வானிலிருந்து மின்னற்கொடி யொன்று வழுவி வீழ்ந்தாற்போல கட்டழகுடைய மங்கை யொருத்தி ஆகாய வழியே வந்து நாகபுரத்தையடுத்த ஓர் சோலையில் இறங்கினாள். அச்சோலையின் வளமும் வனப்பும் அவள் மனதைக் கவரவே அதன் எழில் முழுவதையும் காணவிரும்பி ஒவ்வோரிடமாய்க் கண்டு மகிழ்ந்து வந்தாள். அங்கே வானுற வளர்ந்த ஓர் போதிமரத்தடியில் மாமுனிவர் ஒருவர் வீற்றிருத்தலைக் கண்டு, அவர் தாள் வணங்கி, "அடிகளே! வளப்பம் மிக்க இந்த நாடும் நகரும் யாருடையது?" என்று வினவினாள். தருமசாவகன் என்னும் அம்முனிவர், "புத்ததேவன் அருளிய உத்தம நெறிவழாது நடக்கும் செல்வி! நாகபுரம் என்னும் இந்நகர் சாவகநாட்டின் தலைமைநகர். இதனைப் பாதுகாப்பவன் பூமி சந்திரன் மகன் புண்ணியராசன் என்ற திருப்பெயரையுடையான். மழைவளம் இன்றி மன்னுயிரெல்லாம் பிழைக்க வழியறியாது திகைப்புற்று வருந்தும் காலையில் இச்செல்வன் தோன்றினான். அன்றிருந்து இந்நாட்டில் மழை பிழைத்ததில்லை. நிலமும், மரம் செடி கொடிகளும் பலன்மிகத் தருகின்றன. பசுக்கள் கன்றுகளுக்கு ஊட்டி மிகுந்த பாலைச் சொரிகின்றன. உயிர்களுக்கு எவ்வகையான துன்பமும் இல்லை" என்று கூறினார். அத்தவமங்கை யாரைக்காண விரும்பி வந்தாளோ அவரே அந்நகருக்கு அரசனாயிருப்பதை யறிந்து மகிழ்ச்சி மிகக் கொண்டாள்.

அதுசமயம் புண்ணியராசனும் அரசியும் ஆங்கடைந்து முனிவரை வணங்கினர். முனிவர் தனக்கு என வாழாது பிறர்க்கு என வாழ்ந்த புத்ததேவன் அருளிய அறவுரைகளை அவர்கட்கு விளங்கக் கூறினர். உள்ளம் நெக்குருக மெய்மயிர் பொடிப்பக் கேட்டுக் கொண்டிருந்த அரசன் முனிவர் அருகே கையில் பிச்சைப் பாத்திரத்தோடு வீற்றிருக்கும் தவமங்கையைக் கண்டு, "அடிகளே! மங்கையர்க்கு அரசியெனத் திகழும் இவ்வம்மையார் யாவர்?" என வினவினான். முனிவர் மறுமொழி கூறுவதற்கு முன்பு அரசனோடு வந்த பிரதானி ஒருவன் மன்னனை வணங்கிப் பின்வருமாறு பேசலுற்றான்.

"அரசர்க்கரசே! இத்தவமாதின் வரலாற்றைத் தங்களிடத்து முன்பு

---

வர் ஏனையோர் விஷயத்தில் கேட்கவும் வேண்டுமோ? அவ்விச்சையைப் பிடிவாதத்தால் அடக்க இளமை முதலாகவே சிறு விஷயத்திலிருந்து பயிற்சி பெறல் வேண்டுமென்பதே அன்னையார் கருத்தாகும்.

ஒருமுறை கூறியிருக்கிறேன். செவிப்புலனாலன்றிக் கட்புலனால் இதுவரை தாங்கள் இவ்வம்மையைப் பார்த்திராததால் இதுபொழுது இன்னாரென்று உங்களால் அறிந்துகொள்ள முடியவில்லை. காவிரிப்பூம் பட்டினத்தைத் தலைமை நகரமாகக் கொண்டு சோழநாட்டை ஆண்டுவந்த கிள்ளிவளவன் என்னும் அரசனோடு நட்புரிமைகொள்ள விரும்பி முன்பு ஒருசமயம் அந்நகர் சென்றிருந்தேன். அங்கே புத்ததேவன் அருளிய தரும மார்க்கங்களை அனை வருக்கும் அன்போடு கூறிவரும் அறவண அடிகள் என்னும் பெரியாரின் சிறப்பைக் கேள்வியுற்று அவரை யடைந்து வணங்கினேன். அப்பொழுது அவரிடத்தே இத்தவமங்கையும் கையில் பிச்சைப் பாத்திரத்தோடு அறவுரை கேட்டுக் கொண்டிருந்தனர். யான் வினவுவதற்கு முன்பே அடிகள் இவ் வம்மையின் பெருமைகளை விளங்கக் கூறினர். காவிரிப்பூம் பட்டினத்திலே கோவலன் என்ற வைசியச் செல்வனுக்கும், மாதவி யென்னும் மாதவச் செல் விக்கும் அருந்தவப் புதல்வியாகத் தோன்றிய இவர் மணிமேகலை என்னும் திருப்பெய ருடையார். காதலன் இறந்த கடுந்துயரால் மாதவி துறவு பூண் டாள். தன் தாய் துறவு கைக்கொண்டதை யறிந்து, தானும் இளமை யிலேயே துறவொழுக்கம் பூண்ட தூயவுள்ளத்தினர். தனது பழம் பிறப்பை யுணர்ந்த பாக்கியவதி. இவர் திருக்கையில் இருக்கும் பிச்சைப் பாத்திரம் தெய்வத்தன்மை வாய்ந்தது. நினைத்த வடிவம் கொள்ளவும், ஆகாயத்தில் பறக்கவும், பசி தோன்றாமல் இருக்கவும் வரம்பெற்று இருக்கின்றனர். இவ ரைப் போன்ற தருமசிந்தையும் தூயவொழுக்கமும் பூண்ட உத்தம மங்கை நல்லார் இவ்வுலகில் வேறு எவரும இலர்.''

அரசன் பெருவியப்படைந்து, "தவச்செல்வி! உனது வருகையால் யானும், எனது மக்களும் சிலாகனாயினோம்; எனது நாடு புனிதமாயிற்று. நினது அறப்பெருஞ் செயலைக் கேள்வியுற்ற நாள்முதல் உன்னைக் காணவும், நல்லுரை கேட்கவும் அடியேன் பெரிதும் விரும்பி நின்றேன். எனினும், இது வரை அடைய வியலாதிருந்த அப்பெறற் கரும்பேறு எனது நாடு செய்த தவத்தால் இன்று எளிதில் கிடைக்கப்பெற்றேன்" என்று அரசனும் அரசியும் மணிமேகலையை வணங்கினர்.

"புண்ணியச் செல்வ! வாழ்க பல்லாண்டு! கொல்லா அறமே குவலயம் எல்லாம் வளர்க!" என வாழ்த்தி, "அரசே, முற்பிறவியை அறியாவிடினும், இப்பிறவியின் இயல்பையாவது அறியாமற்போயினையே! செல்வத்தால் மயங்கு பவன் அல்லனாயினும், இப்பிறவியின் இயல்பை இதுவரை நீ அறியாதிருந்தது வியப்பைத் தருகின்றது. சென்ற பிறவியில் உன் கையில் இருந்த தெய்வத் திருக்கலமே இப்பெழுது என் கையில் இருப்பது. உனது சென்ற பிறப்பின் சீர்மையையும், இப்பிறவியின் இயல்பையும் யான் ஏற்கனவே அறவணவடி களால் அறிந்திருக்கிறேன். நீ அவற்றை அறிய விரும்பினையாயின்,

"திருமேவு பதுமஞ்சேர் திசைமுகனே முதலாக
உருமேவி யவதரித்த உயிரனைத்தும் உயக்கொள்வான்
இவ்வுலகும் கீழ் உலகும் மிசையுலகும் இருள் நீங்க
எவ்வுலகும் தொழுதேத்த எழுந்த செழுஞ் சுடரென
விலங்குகதிர் ஓர் இரண்டும் விலங்கிவலங் கொண்டுலவ
அலங்கு சினைப் போதியின் கீழ் அறம் அமர்ந்த பெரியோன்"

ஆன புத்த பகவானது பாத பீடிகையை மணிபல்லவம் சென்று தரிசித்

தல் வேண்டும். அப்பீடிகை புத்ததேவன் அவதரிப்பதற்கு முன்பே தோன்றியது. எல்லாம் அறிந்த ஒருவனையே இப்பீடிகை தாங்கவும் அதனைத் தரிசித்தவர்க்கு அவர்களுடைய பழம்பிறப்பை உணர்த்தவும் கூடிய மேன்மையோடு விளங்க வேண்டுமென, மணிபல்லவம் என்னும் தீவில் இந்திரனால் வைக்கப்பட்ட பெருமைவாய்ந்தது. அத் தரும ஆசனத்தைக் கவர்ந்துசெல்ல வேண்டும் என்ற ஆசையோடு நாகநாடு ஆளும் அரசர் இருவர் ஒருவரோடு ஒருவர் சினமிகுந்து போர் செய்தபொழுது, 'அரசர்களே, உங்கள் எண்ணம் தவறுனது; இவ்வாசனம் எனக்கு உரியது; ஆதலின் நீங்கள் போர் ஒழிந்து செல்லுங்கள்' என்று கூறி, புத்ததேவன் அவ்வாசனத்தில் அமர்ந்து அனைவர்க்கும் தருமோபதேசம் செய்த மாண்புடையது. இந்திரன் ஏவலால் தீவதிலகையென்னும் தெய்வமங்கை யொருத்தி பாதபீடிகையைக் காத்துக்கொண்டு, அத்தீவிலேயே வசித்து வருகின்றாள். நான் இதுபொழுது ஆகாய வழியே அங்குச் சென்று உன் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருப்பேன். நாளையே புறப்பட்டுவா" என்று கூறி, தருமசாவகன் என்னும் முனிவரை வணங்கி ஆகாயத்தில் எழுந்து சென்றாள். அரசமாதேவி இவ்வதிசய வுரைகளைக் கேட்டு மெய்மறந்து நின்றாள். அரசன் முனிவரை வணங்கித் தன் காதலியை அழைத்துக்கொண்டு அரண்மனை சேர்ந்தான்.

புண்ணிய ராசனுடைய அன்னை அமரசுந்தரி யென்பாள் தனது மகனுடைய முக வேறுபாட்டைக் கண்டு, "செல்வப் புதல்வ, ஏன் இவ்வாறு மனம் நொந்து முகம்வாடி இருக்கின்றாய்?" என்று வினவினாள். அதற்கு அவன் "அன்பு நிறைந்த அன்னையே, எனது தந்தை இறந்து ஆண்டுகள் பலவாகியும் தங்கள் ஆதரவால் மனிதன் ஆகி வாழ்கின்றேன். தங்களை அன்னையாகப் பெற்ற எனக்கும் இடர் உளதோ? எனினும் இன்றுமாலை தருமசாவகரை யடைந்து மெய்யுரை கேட்டு நிற்கையில், ஆங்கு ஒரு தெய்வமடந்தை ஆகாயத்தினின்று இறங்கிவந்து காட்சி தந்தாள். நான் அவளை வணங்கி, 'இந் நகர்க்கு எழுந்தருளிய விசேடம் யாது?" என வினவினேன். அவள் தன் வரலாற்றைக் கூறி, "உன் வரலாறு அதிசயிக்கத்தக்கது; நீ அதனை இதுகாறும் அறியாது இருந்தது பேதமை; இப்பிறவியின் வரலாற்றை அவசியம் நீ தெரிந்து கொள்ளவேண்டும்; அதோடு சென்ற பிறப்பின் வரலாற்றையும் தெரிந்துகொள்ள விரும்பினால்,

மணி பல்லவம் எனும் மாபெருந் தீவினில்
பிறவிப்பிணி மருத்துவன் இருந்து அறம் உரைக்கும்
திருந்து ஒளி ஆசனம் சென்று கைதொழுவாய்"

என்று கூறிச் சென்றாள். இப்பிறவியின் வரலாறும், முற்பிறப்பின் வரலாறும் எவ்வாறு இருக்குமோ என்ற கலக்கமே என் மனதை வருத்துகின்றது" என்றான்.

"மகனே, இதற்காகவா வருந்துகின்றாய்? நன்றாயிருந்தது உன் செயல்! உனது பிறவி புனிதமானது. இப்பிறவியில் புண்ணியராசன் என்ற பெயருக்குத் தகுதி வாய்ந்தவனாக விளங்குவதே சென்ற பிறப்பில் நீ சீலமுடையனாக இருந்திருப்பாயென்பதைப் புலப்படுத்துகின்றது. இதில் ஐயமே வேண்டாம். இம்மையிற் செய்வன மறுமையில் பயன்தரும் என்பது உண்மையேயாகலின், நீ சென்ற பிறப்பிற் செய்த புண்ணிய விசேடமே இப்பிறவியில் புண்ணியராசன் என்ற புகழ்பெற்றாய். எனவே, உனது முற் பிறவியும்

பெருமை வாய்ந்ததுதான்; இப்பிறவியும் மாண்புடையதுதான். இது குறித்து நீ மகிழ்வடைவதை விடுத்துக் கவலை கொள்ளுதல் அறிவுடைமையாகாது."

"தாயே, தங்களது அமுத உரைகளால் எனது புண்பட்ட நெஞ்சம் இன்பம் அடைந்தது; எனினும், எனது பிறவி அதிசயம் உடையதாமே! நான் அதை அறிந்துகொள்ள வேண்டாமா?"

"மகனே, நீ குடல் சம்பந்தப்பட்டு பிறந்தவனல்ல; பொன் முட்டையினின்றும் தோன்றிய புனிதன்; ஆதலின் உனது பிறப்புத் தெய்வத்தன்மை வாய்ந்தது"

"பொன் முட்டையினின்று? அன்னையே, இப்புதுமையை ஏழைபால் இதுவரை கூறாது இருந்தது ஏனோ?"

"மைந்தனே, நின்பால் அதனைக் கூறாது மறைக்கவேண்டும் என்ற கருத்து எனக்கு இல்லை; எனினும் அதை உனக்குச் சொல்லவேண்டிய அவசியம் நேராமையின் கூறாது இருந்தேன். தவளமலைச் சாரலில் வதியும் மண்முக முனிவரிடத்து வளர்ந்துவந்த பொன்னிறமான கொம்பும் குளம்பும் உடைய பசு வயிற்றினின்று தோன்றிய பொன் முட்டையினின்று ஒரு புதல்வன் பிறந்தான். அவனை அன்பும் ஆதரவும் பெருக அம்முனிவர் வளர்த்து வந்தார். நீண்ட காலமாகப் புத்திரப்பேறு இல்லாது வருந்திய நானும் உனது தந்தையும் ஒருநாள் அம்முனிவரைத் தரிசிக்கச் சென்றோம். காலைச் சூரியன் கதிர் ஒளிபரப்பிப் பொலிவதுபோல் பேரழகோடு விளங்கிய அச்சிறு மகவைத்தந்து மகப்பேறு இல்லாத எங்கள் குறையைத் தீர்த்தருளுமாறு வேண்டினோம். அவரும் மனமுவந்து அப்புதல்வனைத் தந்து எங்கள் துயரை நீக்கினார். அச்செல்வப் புதல்வனே நீ."

புண்ணியராசன் தாயிடம் விடைபெற்றுப் பிரிந்து, உணவு அருந்திய பின் படுக்கையறை சேர்ந்தான். தன் தாய் அமரசுந்தரியின் அமுத வுரைகளால் அமைதிபெறவில்லை. மணிபல்லவம் சென்று பாத பீடிகையைத் தரிசிக்கவும், பழம் பிறப்பு உணரவும், மணி மேகலையிடம் அறவுரை கேட்கவுமே அவன் மனம்விழைந்து நின்றது. இதனால் தூக்கமின்றி நெடுமூச்செறிந்து படுக்கையில் புரண்டவண்ணம் இருந்தான். அவன் அருகில் சயனித்திருந்த அவனுடைய ஆருயிர் மனைவி தனது கணவனின் துயர நிலையைக் கண்டு, "அன்பரே, தங்களுக்கு என்ன நேர்ந்தது? தூக்கமில்லாமல் கவலையுறும் தங்கள் நிலையைக் காண எனது நெஞ்சம் பெரிதும் புண்படுகிறது. இன்று மாலை மணிமேகலை யெனும் அத்தெய்வத் திருமகளைத் தரிசித்தது முதல் தங்கள் மனம் வேறுபட்டிருப்பதை யான் குறிப்பால் கண்டு கொண்டேன். எனினும் தங்கள் அன்னையின் அறவுரையால் அமைதிபெற்று இருப்பீர்களென்று எண்ணினேன்" என்று கூறி வருந்தினாள்.

"எனது இன்னுயிரே, உன் நெஞ்சமும் என் நெஞ்சமும் ஒன்றே யல்லவா? பின்பு, உன் நெஞ்சு அறியாது மறைப்பதற்கு உரிய செய்தியொன்றும் என்பால் உண்டா? இப்பிறவியின் செய்தியை எனது அன்னையால் உணர்ந்தேன். இனி முற்பிறப்பின் விவரம் முழுவதையும் அறிந்து கொள்ள வேண்டாமா? அன்றியும், தனக்கென வாழாது பிறர்க்கென வாழ்ந்த புத்த தேவனின் பாதபீடிகையைத் தரிசித்து வணங்கவேண்டும் என்ற ஆசைப் பெருக்கும் கரைகடந்து நிற்கிறது. ஆதலின் மணிபல்லவம் சென்று பாத

பீடிகையை வணங்கி, மணி மேகலைபிடம் மெய்யுரை கேட்ட பின்னரே மனம் அமைதிபெறும்''

இதற்காகத் தாங்கள் கவலையுற வேண்டியதில்லையே; நாளை காலையி லேயே புறப்பட்டுப் போய்ப் பாத பீடிகையை வணங்கி வருவோம்''

"நாம் முன்பு ஒரு காலத்தும் சென்றிராத புது இடம் அது; அங்கே உன்னையும் உடனழைத்துச் செல்ல என் மனம் துணியவில்லை; உன்னைப் பிரிந்து செல்லவும் என் மனம் அஞ்சுகிறது. இத்தடுமாற்றமே எனது அமைதி யின்மைக்குக் காரணமாகும."

"உங்கள் தடுமாற்றம் இருந்தவாறு நன்று! நன்று! முன்பு 'நம் இரு வர்க்கும் நெஞ்சம் ஒன்றேயல்லது இரண்டில்லை' என்றீர்கள்; இப்பொழுது என்னை அழைத்துச் செலல உங்கள் மனம் அஞ்சுகிறது!" என்று கூறிக் கண் ணீர் உதிர்த்தாள்.

புண்ணிய ராசனுக்கு இன்னது செய்வது என்று தோன்றவில்லை. தனது மனைவியின் இருகரங்களையும பிடித்துக கொண்டு, "அன்பின் உறைவிடமே! நான் சொன்னதில் என்ன தவறு கண்டாய்? நம் இருவர் நெஞ்சமும் ஒன் றென்று கூறினது உண்மைதான். ஆனால, நான் காண்பதும கேட்பதும் நீ காண்பது கேட்பது ஆகாவா? இவ்வொருமுறை மட்டும் நான் தனியே சென்று வர விடை கொடு" என்று கெஞ்சினான்.

"என்னை 'அன்பின் உறைவிடம்' என்று ஏமாற்றி, நீங்கள் அன்பில்லாத வர் என்பதைச் செயலில் காட்ட முற்பட்டு விட்டீர்கள். 'நாம் இருவரும் ஒருவரே' என்ற தங்கள் உரையை எனது நெஞ்சம் ஏற்க அஞ்சுகிறது. தாங் கள் தனித்துச் செல்கின்ற அத் தீவிலே தங்களுக்கு என்ன நேருமோ? தாங் கள் வரும் நாள் என்றோ? என்று இவ்வாறு எல்லாம் என் மனம் கலங்கு கின்றது."

"நல்லாய், உன்னைப் பிரிந்து நீண்டநாள் அங்கு நில்லேன்; பாத பீடி கையைத் தரிசித்ததும் வந்து விடுவேன்" என்று கூறினான். அவள் மறு மொழி ஒன்றும் பகராது அப்படியே அயர்ந்து படுத்து விட்டாள். சம்மதக் குறியே மௌனம் என்பர். ஆனால் இப்பொழுது இவள் கொண்ட மௌனம் சம்மதத்தின் குறியாகத் தோன்ற வில்லை. புண்ணியராசன் அதன் மேல் செய்வது இன்னதென்று அறியாது, மனம் நொந்து அமளியில் படுத்தவண் ணமே பொழுது புலர்வதை எதிர்பார்த்து இருந்தான்.

புண்ணிய ராசனது எண்ணத்தை யறிந்து அவன் விருப்பை விரைவில் நிறைவேற்றக் கருதினவன் போல் பகலவன் கீழ்த்திசை தோன்றினான். கோழிகள் கூவின. காகம் முதலிய பறவைகள் ஒலித்தன. அரண்மனை யில் காலை முரசம் ஒலித்தது. புண்ணியராசன் எழுந்து சபாமண்டபம் அடைந்தான். உலகத்தில் நிகழவியலாத புதுமை தனது பிறவியில நிகழ்ந் திருப்பதும், மணி பல்லவம் சென்று பாத பீடிகையைத் தரிசிக்கவும் மணி மேகலை யிடத்து மெய்யுரை கேட்கவும் எழுந்த ஆசை ஒரு பக்கம் தூண்ட, அதன் பொருட்டுத் தான் மணி பல்லவம் சென்று மீள வேண்டித் தனது மனைவிக்குப் பலவாறு தேறுதல் மொழிகள் கூறியும் கேளாது தனது செல் கைக்கு உடன் படாதவள் போல் மௌனம் காட்டியதால் ஏற்பட்ட மனத் துயரும் சேர்ந்து அவனுக்கு அரசாட்சியில் வெறுப்பு உண்டாக்கின. மந்திரி

சனமித்திரனை வரவழைத்துத் தன் கருத்தைப் பின்வருமாறு கூறினன்:—
"மதிவல்லோய், எனது பிறப்பின் வரலாற்றை எனது அன்னை கூறுதிருந்த தன்றி, நீயும் இதுவரை என்பால் கூறாது மறைத்தனையே; ஒரு பசு வயிற்றில் தோன்றிய பொன்னிறமான முட்டையினின்றும் நான் தோன்றியவனுமே! இங்ஙனம் பிறந்ததற்கு நான் முற்பவத்தில் செய்த வினை யாதோ? உயிர்கள் எல்லாம் அறிவு குறைந்து நிலை தடுமாறித் தத்தளித்த பொழுது, அவற்றின் பேதமையிருள் நீங்கத் தோன்றிய புத்தஞாயிறின் பாத பீடிகை மணி பல்லவம் எனும் தீவில் இருக்கின்றதாம். அதனைக் கண்டு கை தொழுபவர்க்கு அவர்களுடைய பழம்பிறப்பு நன்கு புலப்படுமாம்! நேற்று மாலை நமது நகர்ப்புறச் சோலையில் தருமசாவகரிடத்தில் அறவுரை கேட்டுக் கொண்டிருந்த பொழுது, ஆங்கே மின்னெனத் தோன்றிய கன்னியர் திலகமாம் மாதவச் செல்வி மணிமேகலையால் அஃது உணர்ந்தேன். அத் தரும பீடிகையைத் தரிசிக்க வேண்டுமென்ற அவா அளவுகடந்து நிற்கிறது. அன்றியும்,

'செருவேல் மன்னர் செவ்விபார்த்து உணங்க
அரசன் வீற்றிருந்து புரையோரைப் பேணி
நாடகம் கண்டு பாடற் பான்மையில்
கேள்வி இன்னிசை கேட்டுத், தேவியர்
ஊடற் செவ்வி பார்த்து நீடாது
பாடகத் தாமரை சீறடி பணிந்து'

அநுபவிக்கும் இப் பொய்மை இன்பத்தை விட்டு நீங்கவும் எனது உள்ளம் பெரிதும் விழைந்து நிற்கிறது. ஆதலின் இன்று முதல் இவ் வரசுரிமையை நீயே ஏற்றுப் பாதுகாத்துவா."

மன்னவன் உரையைக் கேட்ட மந்திரி சனமித்திரன் மனக்கலக்கமுற்று, "அரசே, வாழ்க பல்லாண்டு! எனது புன் சொற்களையும் சிறிது திருவுளம் பற்ற வேண்டும்; இத்தகைய முடிவுக்கு வர தங்கள் உள்ளம் எவ்வாறு துணிந்தது! தங்கள் உரை அடியேற்குத் துயர்தரவில்லையாயினும் வியப்பு அதிகம் விளைக்கின்றது; உலகமுற்றும் அழியினும் தான் ஒருவன் வாழ்ந்தாற் போதும் என்று நினைக்கும் கீழ் மக்கள் கூறும் வார்த்தையன்றோ இவை? பூமி சந்திரன் என்னும் அரசர் தங்களைப் பெறுவதற்கு முன்பு இச் சாவகநாடு பன்னீராண்டு மழைவளமின்றி, மன்னுயிரெல்லாம் மடியத் தொடங்கின. ஈன்றாள் தன் மகவுக்கு இரங்காது தானே தனித்து உண்ணும் அக் காலத்து, காய்ந்த வெவ்விய கோடையில் நீல மேகம் தோன்றியது போல நீர் தோன்றினீர். அரசர் பெருந்தகையே! அன்று தொட்டு மழை பொய்த்ததில்லை, மண் வளம் பெற்றது, உயிர்கள் எல்லாம் பசி யென்பது அறியாவாயின. தாங்கள் இந்த நாட்டை விட்டு நீங்குவீர்களாயின் தாயில்லாக் குழவிபோல இக் நாடு வாய்திறந்து கூவா நிற்கும். ஆதலின் தங்கள் நினைவை மறந்தருள வேண்டுகிறேன்" என்று கூறினன்.

"அறிவின் மேம்பட்ட அமைச்சரே, என்னால் இந்த நாடு வளம் பெற்றது என்பதை நான் ஒப்பமாட்டேன்; நல்லவை புரிந்தோர் நன்னிலையடைதலும், அல்லவை புரிந்தோர் அருநரகு அடைதலும் அனைவர்க்கும் ஒப்ப முடிந்ததே யாகலின், இந் நாடு செய்திருந்த இரு வினையுள் தீவினைப்

பயனை அநுபவித்துக் கழித்து, இப்பொழுது நல்வினையின் பயனை அநுபவிக்கின்றது. ஒருவன் பெறும் இன்பமும் அவன் செய்த வினையின் பயனே யல்லது, வேறொருவன் அதற்குக் காரணமாகான். ஆதலின், எனது விருப்பை மாறாது ஏற்றுக் கொள்ள வேண்டும்.''

"நாடு செய்த இருவினையுள் புண்ணியத்தின் பயனே தாங்கள்; இந் நாட்டினின்றும் தாங்கள் நீங்குவீர்களாயின் புண்ணியம் இந் நாட்டினின்றும் அகன்றது என்ற பொருளே யன்றி வேறன்று. அவரவர் செய்த வினைப் பயனை அவரவர் அநுபவித்து ஆக வேண்டு மென்பது உண்மைதான்; ஆனால் இவ்வுரை என்னைப்போன்ற பிறர்க்குப் பொருந்துமேயன்றி தங்களுக்கு ஒவ்வாது. மன்னுயிர் எல்லாம் மண்ணாள் வேந்தன் தன் உயிர் ஆதலின், வேந்தன் நாட்டை விட்டு நீங்கின் பிறவுயிர்கள் மட்டும் அந் நாட்டில் நிலைத்திருக்குமா? அன்றியும், அவரவர்கள் செய்த வினைப்பயனை அவரவர்களே அநுபவித்தாக வேண்டுமல்லது, பிறர் முயன்று அவ் வினைப்பயனை ஒழிக்கப் புகுதல் வீண் முயற்சியே யாகும் என்றல் நேர்மையல்ல. நம்மையெல்லாம் ஆட்கொண்ட ஐயன் மீனும், முயலாயும், அன்னமாயும், மயிலாயும் பிறவாயும் அவதரித்து அவ்வவற்றின் துயரைப் பரிகரிக்க முயன்றதேன்? அருநரகில் சிலர் வருந்த, அவர்கள் துயரை ஒழிப்பதற்கு நம் கருணை வள்ளல் அந் நரகிடையும் சென்று அருள வில்லையா? ஆதலின் துயர் நிறைந்த உலகைக் காத்தலின்றி உயர் நிலையாகிய நிருவாணத்தை விரும்பினிராயின், உயிர்கள் எல்லாம் துயரம் அடையவும், நீங்கள் இன்பம் அடையவும் விரும்பியதாகவன்றோ முடியும்?

'தன் உயிர்க்கு இரங்கான் பிறவுயிர் ஓம்பும்
மன் உயிர் முதல்வன் அறமும் இதன்றே'

பிறவுயிர்களின் துன்பத்தை நீக்கக் கருதாது, தன் பயனைக் கருதித் துறத்தற்குத் துணிந்தீரே! இது என்ன புதுமை!'' என்று மேன் மேலும் அறவுரை பல அமைச்சன் கூறினான்.

அரசன் அம் மெய்யுரையை மறுக்க வியலாது, "அறிவான் மிக்க பெரியோய், மணி பல்லவம் சென்று தரும பீடிகையைத் தொழுது வரவேண்டுமென்ற எனது வேட்கை தணித்தற்கு அரிது. யான் சென்று ஒரு திங்களில் திரும்பி விடுகின்றேன்; அதுவரை இந் நாட்டைப் பாதுகாத்தல் நின் கடன். அன்றியும், எனது மனைவி என் பிரிவிற்கு உடன்படாது வருந்துகின்றாள். அவளையும், அன்னையையும், பிறரையும் ஆறுதல் கூறி ஆதரித்திடுவாய்; மாதவன் அமர்ந்த பாத பீடிகையையும், மணிமேகலை தீவதிலகை இவர்களையும் வணங்கி மெய்யுரை கேட்டுத் திரும்பி வருகின்றேன். சென்று வர அன்புடன் விடை கொடு'' என்று இரந்து நின்றான். அமைச்சன் அரசனுடைய தணியா வேட்கையையும், அதனால் உலகம் மேல் நிலையடைதல் கூடுமெனவும் கருதி அரசனுக்கு விடை தந்து, மணிபல்லவம் சென்றுவர கப்பலைச் சித்தப்படுத்திவைக்குமாறு ஏவலாளர்க்கு ஆணையிட்டான். அவர்கள் அப்பொழுதே கப்பலைத் துறை முகத்தில் கொண்டு வந்து நிறுத்தினர். அரசன் அனைவரிடத்தும் விடை பெற்று வங்கம் ஏறி மணிபல்லவம் அடைந்தான்.




## 49. பார்லிமேண்டின் அமைப்பு முறை சீர்திருத்த முயற்சிகள்

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

அரசியல் நிர்வாகத்தின் பல அம்சங்களையும், பொதுஜன சபையின் சம்மதத்தின் பேரில் தான் நடத்தத் திட்டம் செயது விட்டனர். குடியேற்ற நாடுகளைப் பெருக்கி, வியாபாரத்தை அபிவிருத்தியாக்கிக்கொண்டதுடன், பல போர்களில் தங்களுடைய சமுத்திராதிக்கத்தையும் நிரூபித்தனர். அதனால் தான், உலகத்தை யாட்டி, ஐரோப்பாவைக் கலக்கி, தேசங்கள் பலவற்றையும் தன் ஆதிக்கத்தில் இருத்தி, "மன்னன் வாக்கிற்கு மறு வாக்கின்றி மேலோங்கி வந்த நெப்போலியனை"த் தோற்கடித்து, கைதியாக்கி, ஆப்பிரிக்காவிற் கருகிலிருக்கும் ஸெண்ட் ஹெலினா தீவுக்கனுப்பி, சிறைவைத்து, செத்து மடியச் செய்து விட்டனர். மத சம்பந்தமாகவும், பெரும்பாலான ஆங்கில மக்களுக் குகந்ததான ஆங்கிளிகானிஸம் என்ற திட்டத்தை எலிஸபெத் காலத்திலேயே ஏற்பாடு செய்து விட்டனர். அத்திட்டத்திற்குப் புறம்பான கதோலிக்கரையும, தீவிர பரிசுத்த வாதிகளையும் (Puritans) அநேக விதமான அல்லல்களுக்கும் அவதிகளுக்கும் சஞ்சலங்களுக்கும் உட்படுத்தினர். பிறகு நிதானப் போக்கை மேற்கொண்டு கேவலம் மதம் ஒன்று மட்டும் வேறான காரணத்தினால் தேசத்தில் பிறந்த ஒரு மேதாவியின் தேச ஊழியத்திற்கு, தடங்கல் ஏற்படக் கூடாதென்ற தாராள மனப்போக்கு உண்டாகி, பல பல மேதாவிகளுக்கு சந்தர்ப்பத்திற்கு மத ப்ரமாணம் செய்து கொள்ளும் மாமூல் ஏற்படுத்திக் கொண்டதும், அது காரணமாக தேசப் பொது மக்களிடையிலும், மதகுருமார்கள் இடையிலும் ஒருவித சோர்வும் சோம்பலும் தோன்றி விட்டதை வெஸ்லி இயக்கத்தினால் சீர் செய்து கொண்டார்கள் என்பது முன்பு எழுதப்பட்டது. குடியேற்ற நாடுகள் அதிகமாகின. அதன் மூலம் வியாபாரமும் பெருகியது. அதற்கு ஆதாரமாக கைத்தொழில் முறையிலும் பல பல அறிவாளிகளின் முயற்சியினாலும் உழைப்பினாலும் புரட்சியான மாறுதல்கள் ஏற்பட்ட விபரங்களும் வாசகர்கள் அறிந்தனவே. ஓய்வும், ஒழிவும், சௌகரியங்களும் உள்ள பலர் கிராமங்களில் இருந்து கொண்டு, விவசாய முறைகளும் ஆராய்ச்சி செய்யப்பட்டு, அதிலும் ஓரளவு முன்னேற்றம் அடையலாயினர். இவ்வளவு அபிவிருத்திகளுடன், தேச இலக்கியங்களிலும் இயற்கையின் பெருமை, கடவுளின் அம்சம், மனித ஜன்மத்தின் புனிதத்தன்மை முதலியவற்றைப் பற்றிய கவிகளும் ஏற்பட்டன என்பது மிகையாகாது.

ஆனால் தற்காலத்தில் புரிந்து கொள்ளப்பட்டபடி, ஜனநாயக ஆட்சியின் அடிப்படையான தத்துவம் மட்டும் சரியானபடி ஸ்தாபிதம் ஆகாதபடி

யும், புரிந்தாலும், அனுஷ்டானத்தில் கொண்டு வராதபடியும், "பணம் பாதாளம் வரையில் பாயும்." "பணம் பந்தியிலே குணம் குப்பையிலே" என்ற பழமொழிக்கு இலக்காக, இங்கிலந்து மக்களின் ஜனநாயகக் கொள்கையிருந்து வந்தது என்னலாம். இன்றும் கூட ஒரு விதத்தில் "பணத்தின் நடனம் தான் தேச நிர்வாக அங்கத்தினர்களை நிர்ணயிக்கின்றது அங்கே" என்று கூசாமல் எழுதலாம். (சென்ற மாதத்தில் தான் தேர்தல் அமளியின் வேகத்தை நன்குணர்ந்திருக்கும் வாசகர்களுக்குக் குறிப்பு தேவை யில்லை.) ஏனெனில் இங்கிலாந்தின் பொதுஜன சபையின் அமைப்பு முறையில் பொது ஜனங்கள் என்பவர்களுடைய திக்கிலிருந்து அடிக்கும் காற்றுக் கூட கிடையாது. அங்கத்தினர்கள் அவ்வளவு பேரும் பிரபுக்களின் வம்சத்தினராகவே இருக்கத் தான் சாதகம் இருந்தது. இங்கிலாந்தில் அமுலிலுள்ள "The law of primogeniture" என்ற (மூத்த பிள்ளைக்குததான் வார்சுரிமை யுண்டு) திட்டத்தின்படி ஒரு பிரபுவின் மூத்த மகன் மட்டும் பிரபுவாக நிர்ணயிக்கப் படுவது முறை. மூத்த பிள்ளை வார்சு இல்லாமல் ஒழிந்தால் தான் மற்றப் பிள்ளைக்கு, பட்டம கனவாவது காணலாம். அல்லாத முறையில் மற்றப் பிள்ளைகள் பொது ஜனங்களாகத் தான் நிர்ணயிக்கப் படுகிறார்கள். (உதாரணமாக, மஹாத்மா காந்தியடிகளுடன் ஒப்பந்தம் செய்து கொண்ட மாஜி வைஸிராய் இர்வின் பிரபு அவர்கள், இந்திய வைஸ்ராய் பதவி ஏற்றுக்கொள்ளும் தருணம் வரையில் மிஸ்டர் ஈ எல். எஸ். உட் ஆக இருந்து, பிறகு பிரபு வாக்கப்பட்டார் என்பதை ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும்.) அந்த முறைப்படி, இது வரையில் குறிப்பிடப் பட்டிருக்கும் பல போராட்டங்களையும் நடத்தி உரிமைகளை பொது ஜனங்களுக்குத் தான் உண்டு என்று ஸ்தாபித்ததாகச் சொல்லப்படும் பெருமை பூராவும் பெயரளவில் பொது ஜனங்களே தவிர, உண்மையில் பிரபுக்களின் சந்ததியார்கள் தான் அப் பெருமைக்கு ஆளானவர்கள் என்பது புரிந்திருக்கும். தேர்தலில் நின்று, பலவித மருட்டல், உருட்டல், அதட்டல், புழுதிமாயங்கள், பண விரயங்கள் முதலியவற்றைச் செயய வேண்டியிருக்கும் போக்கை பாமர பொதுஜனங்கள் எவ்வாறு செய்து, கையாண்டு, வெற்றி பெற முடியும் என்பது இப்போது இந் நாட்டில் மட்டும் அல்ல எப்போதும் எந் நாட்டிலும் இருந்திருகக வேண்டிய ஆவசியகம் வாசகர்களின் மனதில் பதியலாம். பொதுவாகத தேர்தல் என்பதே வெகு அசிங்கமும், ஆபாஸமும், சுத்தமற்றதுமான விஷயம் என்பதை அறிவாளிகள் அறிவார்கள். இப்போது அனுபவமும் ஆன ஒரு இயற்கை விஷயமே.)

இந்த விதத்தில் பொதுஜன சபையின் அமைப்பில் தேர்தல்களில் வெற்றி பெற்று சபைகளில் நிரம்பிய பிரதிநிதிகள் பிரபுக்கள் தான் என்பது வெளிப்படை. பெருவாரியானவர்கள் பிரபுக்களின் சந்ததியார்கள் பண மூட்டைகளின் ஆதிக்கத்தினாலும் பிரபுக்களின் அதிகாரச் செருக்கினாலுமே, பிரதிநிதிகளாக வீற்றிருந்து, பார்லிமெண்ட் சபைக்கே பலவித உரிமைகளை சம்பாதித்து வைத்தனர். இந்த நிலைமையைத் தான் வால்போல் சவுகரியமாகக் கொண்டு 20 வருஷ காலம் செல்வாக்கி லிருந்து, காபினெட் ஆட்சி முறைக்கு அடி கோலினன். பொதுஜனப்ரியனுன பிட பார்லிமெண்டின் அங்கத்தினராகி, பிறகு பிரபுவாகவும் ஆனார். இதே முறையைக் கையாண்டு தான் ஜார்ஜ III அரசன் "அரசனுடைய நண்பர்கள்" என்ற கோஷ்டியி

னரை உண்டாக்கிக் கொண்டு சுமார் 10 வருஷங்களுக்குள் பல மந்திரி சபைகளைச் சிதைத்து, தன்னரசு நடத்த முயன்றான். அதைக் கண்டு தான் அங்கத்தினர்களான பாக்ஸ் (Fox) பர்க் (Burke), இளையபிட் (Younger Fitt) முதலியவர்கள் பார்லிமெண்டின் அமைப்பு முறையின் அடிப்படையான தத்துவத்தை மாற்றியமைக்க முயற்சி செய்தனர். ஆனால் பிரஞ்சுப் புரட்சி பூச்சாண்டியினால் அந்தத் தாராள நோக்கங்கள் காற்றில் விடப்பட்டு, கடுமையான அடக்குமுறைகள் கையாளப்பட்டனவென்பது முந்தின தொடர்ச்சிகளில் குறிப்பிட்ட விஷயம்.

தவிரவும் தொழில் முறைப் புரட்சி ஏற்பட்ட காலத்தில் ஜனசமூக அமைப்பிலும், ஜனத்தொகைப் போக்கிலும் பல முக்கிய மாறுதல்கள் உண்டாயின. அதன்படி, ஒரு காலத்தில் ஜனநெருக்கமுள்ள பிரதேசங்களில், ஜனங்கள் நாளடைவில் குறைந்து பாழடையவும் நேர்ந்தன. அதற்கு நிகராக, ஒரு காலத்தில் வெறும் பொட்டல் நிலங்களாக இருந்த பிரதேசங்கள் பிறகு வெகுஜன நெருக்கமுள்ள பாகங்களாக ஆயின. ஆனால், தேர்தலுக்கான தொகுதிகள் மட்டும் முன்பு ஒருகாலத்தில் ஸைமண் டி மாண்ட்பார்ட், எட்வர்ட் I இவர்கள் காலத்திய திட்டப்படுத்தப்பட்டிருந்த அந்த நிர்ணயத்திலேயே பிரஸ்தாபகாலம் வரையில் இருந்தது. ஜன நெருக்கமே யில்லாத பிரதேசங்களுக்கும் பட்டணங்களுக்கும், முன்புள்ளபடியே இரண்டு இரண்டு பிரதிநிதிகளும் இருந்தனர். ஆனால் புதியனவாக ஏற்பட்ட ஜனநெருக்க பிரதேசங்களுக்கு பிரதிநிதிகளே சுத்தமாக இல்லை. இது சாதாரணமாக வயிற்றெரிச்சலைக் கிளப்பும் விஷயமல்லவா ? மேலும், புதிய தொழில் முறைகளை நாடி பல கணக்காக பொருள் சேர்த்தவர்களுக்கு வாக்குரிமையும் கிடையாது. பிரதிநிதித்துவமும் கிடையாது. ஏனென்று கேட்பாரு மிலர். இம்மாதிரியான பாழ்த்த பிரதேசங்களுக்கு சரித்திரங்களில் "அழுகின பிரதேசங்கள்" என்று பொருள்படும் (Rotten Boroughs) என்ற பெயர்கள் வழங்கியிருப்பதை எந்த ஒரு சாதாரண இங்கிலந்து சரித்திரங்களிலும் காணலாம். இம்மாதிரியான அழுகின பிரதேசங்களுக்கு பரிகாசமாக(Pocket Boroughs) பைக்குள் எடுத்துப் போகக்கூடிய தேர்தல் பிரதேசங்கள் என்ற மறுபெயரும் உண்டு. பல பாக்கெட் பிரதேசங்களின் தைரியத்தால்தான் வால்போல் இறுமாந்து பிட்டைச் சுட்டிக்காட்டி, "இம்மாதிரி மனிதர்களை விலைக்கு வாங்கி விடுவேன்" என்று எளனம் செய்தான், தன் கட்சியையும் வெகுகாலம் செல்வாக்கி லிருக்கச் செய்தான் ! உண்மையில் மூத்த பிட்டும், பழையசாரம் (Old Sarum) என்ற ஒரு பாழ்த்த பிரதேசத்தின் பிரதிநிதியாகத்தான் ஆதியில் பார்லிமெண்டில் அங்கத்தினரானார் !! இதனால் சீர்திருத்தம் செய்யவேண்டி யிருந்த அவசியம நெப்போலியனை ஒழித்த பிறகு நிரம்ப ஏற்பட்டது. ஆனால் பார்லிமெண்டில் ஆதிக்கம் வேரூன்றியிருந்த மஹான்களுக்கோ சீர்திருத்தத்தில் எள்ளளவும் இஷ்டமில்லாதிருந்தது இயற்கையேயன்றோ ? ஆனாலும் பெருவாரியான பொதுமக்களின் உள்ளங்களில் வீரிட்டெழுந்த உணர்ச்சியை அத் தலைவர்கள் எவ்வாறு தடைசெய்ய முடியும்? மத உணர்ச்சியும் புதிதாகி, தொழில் முறையிலும் மாறுதல்கள் ஏற்பட்டு, தொழிலாளி முதலாளி ஸ்தாபனங்களும் ஏற்பட்டு, பாமர ஜனங்களின் கஷ்டங்களையும் உணர நேர்ந்தபோது சில முக்கிய சீர்திருத்தங்கள் ஏற்பட்டனவாம். அவைகளின் முதன்மையானது 1807-ம் வருஷத்திய "அடிமைகள் வியா

பார ரத்து சட்டம்'' (The Act of abolishing Slave trade) ஆகும். வெஸ்லி சகோதரர்களின் இடைவிடாத முயற்சியினுல் ஏற்பட்ட வெஸ்லி சங்க ப்ரசாரத்தினுல் மனிதனுக்கு மனிதன் வேற்றுமையில்லை என்ற சமத்துவப் புத்தி உண்டாயிற்று. நீடித்தகால மெதுவான பிரசாரத்தினுல், 1807-ல் நிர்வாகம் செய்த "எல்லா மேதாவிகளும் சேர்ந்த மந்திரிசபை" (The Ministry of all talents) இச் சட்டத்தை செய்து முடித்தது. இந்தமாதிரியான ஜீவகாருண்ய இயக்கம் வில்பர்போர்ஸ் (Wilberforce) போன்ற பலருடைய இடைவிடாத பிரசாரத்தினுல் வேரூன்றி நாளடைவில் பல இதர சீர்திருத்தங்களுக்கும் காரணமாயிற்றும். ஐர்லந்து ஐக்கியத்தின்போது, துரோகமாக கைவிடப்பட்ட "கதோலிக்கருக்கான உரிமைகளை"ப் பற்றிய விஷயம் பல ஜனங்களின் மனதைப் பாதித்தது. முக்கியமாக ஐரிஷ் மக்களின் மனம்தான் படாத பாடு பட்டு, அவ்வுரிமைகளைக் கொடுக்கும்படி பிரிட்டிஷ் கவர்ண்மெண்டை வற்புறுத்துவதற்காக கிளர்ச்சிகளும், பிரசாரங்களும் நாடெங்கும் நடைபெற்றன.

இத் தொடர்ச்சிகளைத் தொடர்ந்து படித்துவரும் அன்பர்களுக்கு, "இங்கிலாந்தில் ஸ்தாபிக்கப்பட்ட ஆங்கிளிகன் மதத்திற்குப் புறம்பானவர்களுக்கு" விரோதமாகச் செய்யப்பட்ட சட்டங்கள் பலவும் தெரிந்த விஷயமாகும். முக்கியமாக "சோதனைச் சட்டம்" அதன்படி இங்கிலாந்து நிர்வாகத்தில் உத்யோகம் பெறுவதானுல் இங்கிலாந்தின் மதத்தை யனுஷ்டிப்பதாகப் பிரமாணம் செய்யவேண்டும். அதை மறுத்துத்தான் இரண்டாவது ஜேம்ஸ் பாலியத்தில் பார்த்துவந்த கப்பல் தலைவன் பதவியை ராஜீனமாச் செய்தான். பிறகு முடியரசு மீட்சி காலத்தில், ப்யூரிடன் (தீவிர பரிசுத்த) மதத்தினரிடம் கொண்ட மாருத வருத்தத்தினுல், செய்யப்பட்ட ஐந்துமைல் சட்டம், சங்கச் சட்டம், ஸ்தலஸ்தாபனச் சட்டம் முதலிய சட்டங்கள், ப்யூரிடன்களைப் பாதித்த அதே அளவு கதோலிக்கர்களையும் பாதித்தது என்பது சொல்லாமல் விளங்கும். மேலும் புரட்சித் திட்டம் ஸ்தாபிக்கப்பட்டபோது, ஐரிஷ்காரருக்கு, கதோலிக்கர் என்ற காரணத்தினுல் மட்டும், கூறவொணுத இன்னல்கள் விளைவிக்கப்பட்டன வென்பது சென்ற கட்டுரையில் சொல்லப்பட்டது. ஆக எல்லாமாகக் கூடி கதோலிக்கருக்கான இடையூறுகளை நிவர்த்தித்து, அவர்களுக்கும் பிரஜா உரிமைகளை அளிக்க வேண்டுமென்று பொதுவான ஒரு கிளர்ச்சியே ஏற்பட்டது சகஜ மன்ருே ? ஜார்ஜ் III இறந்த பிறகு அதற்கான கிளர்ச்சிகள் வலுப்பட்டு, 1829-ல் மும்முரமாக ஏற்பட்டது. ஆகவே "கதோலிக்கர் விடுதலைச்சட்டம் (Catholic emancipation Act) செய்யப்பட்டது. இதற்கு எவ்வளவோ எதிர்ப்புகள் நேர்ந்தனவாம். அரசன விசேஷ அதிகாரத்தின் மூலம அதிக பிரபுக்களை நியமித்து, அச் சட்டத்திற்கு ஆதரவைத்தேடி விடுவதாகச் சொன்னதின்பேரில் மிகவும் குறுகியபோக்குள்ள கக்ஷியினரும் சம்மதிக்க வேண்டி நேர்ந்துவிட்டதெனச் சொல்லப்படும். இதன் பிறகு இக் கட்டுரையின் தலையங்கத்தில் குறிப்பிடப்பட்ட பார்லிமெண்டின் அமைப்பு முறைச் சீர்திருத்தமும் வேண்டுமென்ற கிளர்ச்சி அதிகமாகி, அது சம்பந்தமாக பல சட்டங்கள் முறையே 1832-லும், 1864-லும், 1884-லும், 1911-லும, 1918-லும் நடந்தனவென்று சொல்லப்படுகிறது. அவற்றை விவரிதது, அடுதத தொகுதியில் எழுதப்படும். (நீடித்த தொடர்ச்சிகளாக இருப்பதால், இடையிடையே பழைய பல விபரங்களைக் குறிப்பிட நேரிடும் அவசியத்தை வாசகர்கள் மன்னிப்பார்களாக !) (தொடரும்.)

சிறு கதை.

# கண்ணப்பன்-ஓர் ஹரிஜன இளைஞன்

(பிறையழகன்)

"என் உயிரனைய இந்து சமயமே! அநாதிகாலமாய் சிறப்புற்றிருந்த இந்து மதமே! ஆழ்வார்களாலும் நாயன்மார்களாலும், ஆசாரியர்களாலும் உன்னத நிலையடைந்த மதமே! நீ அழியுங்காலம் வந்தது கொல்! அந்தோ! உன்னுடைய பெயரால் சுயநலமிக்கார் செய்யும் அட்டூழியங்கள் அநந்தம். அறியாமை என்னும் இருளில், ஜாதித்திமிர் என்னும் மதவுண்டு, சுயநலம் என்னும் பேய்கொண்டு அவர்கள் அலைகின்றனரே! அவர்களை அடக்குவாரில்லையே!

"இந்தியாவின் மக்கள் இந்தியர். அவர்களுக்குரிய மதம் இந்து மதம்" என்று அன்னியநாட்டார் எண்ணிய காலம் போச்சே! இன்று நாட்டில் எத்தனை மதங்கள்! இதற்கெல்லாம் காரணம் இந்துமதத் தலைவர்கள் தம் சோம்பலும் மதியீனமுமே. அவர்கள் மதியீன மற்றவர்களாயின், இன்னும் சமூகத்தின் ஒரு பெரும் பிரிவினரை,—தம்முடன் பன்னெடு நாட்களாக வாழும் மக்களைத் தீண்டாதார் என்றும், கோயிலுள் நுழையத்தகாரென்றும் ஒதுக்கி வைப்பரா? ஆஹா! இதன் பலனென்ன? மக்கள் இஸ்லாத்தையும், கிறிஸ்துவையும் நாடிச் செல்லுவதுதான். நேற்றுதானே பத்துப்பேர் ஞானஸ்நானம் செய்விக்கப் பட்டனர். கைமேல் கண்ட பலன் இதுதான். ஐயோ! இன்னும் சில காலத்தில் ஹிந்து மதமே அழிந்துவிடும்போ லிருக்கிறதே! அப்போது இச் சுயநலப் புலிகள் என்செய்வர்? ஐயோ! ஆ! ஆ!" என்று ஈனசுரத்தில் பிரலாபிக்கத் தொடங்கினான் பெருமாள் கோயில் கோபுரத்தைப் பார்த்துக்கொண்டே தன் தோட்டத்தில் உட்கார்ந்திருந்த கண்ணப்பன்.

கண்ணப்பன் யார்? அவன் ஏன் அழவேண்டும்? என்று புரிகிறதா! நாமும் தீண்டாதாராகப் பிறந்திருந்தால் தெரியும். சரி; கேளுங்கள்.

கண்ணப்பன் ஓர் ஹரிஜன இளைஞன்; இந்தியாவில் பிறந்தவன்; தென்னாப்பிரிக்காவில் வளர்ந்து, கல்வி பயின்றான்; இந்துமத நூல்களை ஆராய்ந்தான். இந்தியாவுக்கு வர எண்ணம் கொண்டான். இச்சமயத்தில் தென்னாப்பிரிக்காவின் மக்களில் இந்தியர்களை மட்டும் பாதிக்கும் சட்டங்கள் ஏற்படவே, கண்ணப்பனின் குடும்பத்தார் கப்பலேறி, இந்தியாவுக்குத் திரும்பினர். கண்ணப்பனுக்கு இந்தியாவிலேயே மணம் செய்யவேண்டு மென்பது அவனது பெற்றோர் கருத்து.

கப்பல் இந்தியாவை அடைந்தவுடன் கண்ணப்பன் கொண்ட ஆனந்தத்திற்களவேயில்லை. "நம் தாய்நாடு. இனி நாம் நம் இனத்தாருடன் இன்புறலாம்" என்று எண்ணினான்.

நாட்கள் பல சென்றன. தீண்டாதாருக்கு இழைக்கப்படும் இன்னல்களை உணர்ந்தான் இளவல் கண்ணப்பன். தன் ஊரில் உள்ள பெருமாள் கோயி

னுட்சென்று வர ஆவல் மிருந்தான். திருமண் தரித்து பிராமண கோலத்துடன் கோயிலுட் சென்றான். அன்று திருவிழா.

கண்ணப்பன் பெரு வியப்படைந்தான். தான் படித்தபடி ஒன்றும் நடைபெறாமை கண்டு ஏமாற்ற மடைந்தான். பஜனை நடக்குமிடத்தில் ஒருசிலர் நின்றனர். மேளக் கச்சேரியைக் காண பெருங்கூட்டம், பரதநாட்டியக் கச்சேரியண்டை ஏன் விழ இடமில்லை. தூர நடக்கும் வாண வேடிக்கையைக் காண மக்கள் திரண்டு சென்றனர்.

"சரி இன்னும் காண்போம்" என்று மூலஸ்தானத்தை நோக்கி நடந்தான். இருவர் உண்டியைக் குலுக்கக்கண்டு, "கடவுளைக்காண காணிக்கை தரவேண்டுமோ" என்று நினைந்துகொண்டு, காணிக்கை செலுத்தி உட்சென்றான்.

என்ன பயங்கரம்! ஓரிருண்ட குகையில் சுவாமி வீற்றிருந்தார். துரிஞ்சல் நாற்றம் உயிரை வதைத்தது. கற்பூரப்புகை அதை மாற்ற முயற்சித்தது. "ஹே! தீண்டாதான் கோயிலுள் கால் வைத்தால் சுவாமி ஓடிவிடுவார் என்கிறார்களே, இந்த துரிஞ்சல் நாற்றத்தில் மட்டும் எப்படி அவர் இருக்கிறார்?" என்று மனதில் சொல்லிக் கொண்டான்.

மடப்பள்ளி யருகில் சென்றான். என்ன வாசனை! எத்தனைவித சித்ரான்னங்கள்! "இவ்வளவையும் சாப்பிடுவது யார்! இதற்கெல்லாம் எவ்வளவு பணம் செலவாகுமோ?" என்றெண்ணியவாறே வெளிக்கிளம்பினான்; வீடடைந்தான். கண்ணப்பன் ஏன் அவ்வாறு அழுதான் என்று இப்போது தெரிகிறதா?

இவ்வளவு கீழ் நிலையிலுள்ள மக்களிடம் அவனுக்கு வெறுப்புண்டானதில் என்ன வியப்பு? அவன் மத ஆராய்ச்சி இல்லாதவனாயின் என் செய்வான்? கிறிஸ்து மதத்திற்கோ, இஸ்லாம் மதத்திற்கோ போவானன்றோ? ஆனால் நம் கண்ணப்பன் அப்படிச் செய்வானோ? அவனது மனச்சாட்சி யதற்கிடந் தருமோ? லௌகீக சுகத்திற்காக ஆன்ம உணர்வில் குன்றுவதா! மற்ற மதங்களில்தான் லௌகீக சுகமிருக்கிறதென்று நிச்சயமோ? அவற்றுள் எத்தனை பிரிவு! எத்தனை ஜாதி! எவ்வளவு ஆசார வேற்றுமைகள்! இவை யெல்லாம் உணர்ந்தான் இளவல்.

* * * *

திருமணம் நிகழ ஒரு மாதகாலம் இருக்கிறது. இரங்கூனுக்குச் சென்று தன்னை ஓர் உயர்குலத்தானாக பாவித்து வாழ்வதென்று தீர்மானித்தான் கண்ணப்பன்.

கப்பலில் காலை வைத்தான் கண்ணப்பன். அவன் மனம் திடீரென மாறியது. "என்ன, நானிப்படிச் செய்து விட்டேனே! அடிமைத் தளையாலும் ஜாதிச்சமய சண்டைகளாலும் அல்லலுறும் ஏழைத் தாய்நாட்டைப் பிரிய எண்ணினேனே! ஐயோ! நானும் வாலிபனா?

'அற்றகுளத்தி னறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வா ருறவல்லர்'

என்பதற்கு நானே உதாரண மாயினேனே!" என்று ஏங்கினான். கலமும் கரையினின்று கிளம்பி விட்டது. கரை கொஞ்சங் கொஞ்சமாய் தூர செல்வதைக் கண்டு கண்ணப்பன் பெருமூச்செறிந்தான்.

"சரி இனி ஆவதொன்றில்லை. எல்லாம் இறைவன் செயல்" என்று சொல்லியவாறே ஒரு அறையுள் நுழைந்தான்; அவ்வறையின் வாயிலில் தொங்கவிடப்பட்ட ஒரு பலகையைக் கண்டான். அதில் "இவ்வறைக்குள் இந்தியர் நுழையக்கூடாது" என்று எழுதப்பட்டிருந்ததைக் கண்டு, நம் இளைஞன் வெட்கமும், கோபமும் கொண்டான். தன் நாட்டினருக்குள்ள அபகீர்த்தி அவனைத் தலைகுனியச் செய்தது. அதே சமயத்தில் வெள்ளையர் மீது கோபமும் கொண்டான். அக்கோபம் இந்நேரத்தில் இந்தியர்மீது திரும்பியது.

"எளியாரை வலியார் வாட்டினால், வலியாரைத் தெய்வம் வாட்டுகிறது. தம்முடன் வாழும் மக்களை மாக்களாக மதித்து விலக்கும் இந்திய நாட்டார்க்கிதுவும் வேண்டும்; இதற்கு மேலும் வேண்டும்" என்று சொல்லிக் கொண்டான் இளைஞன்.

பின்பு, கண்ணப்பன் தன் நிலையை எண்ணினான். "ஆஹா! வாய்த்த வீடும்போய் அடுப்பு நெருப்பு மவிந்ததே! தென்னாப்பிரிக்காவை மறந்தேன்; சுயநாட்டைத் துறந்தேன்; திருமணத்தை இழநதேன். இனி நான் என் செய்வேன். இக் கப்பலிலேயே என் பாடு இவ்வளவானால், இரங்கூனில் எவ்வாறுமோ? அங்கு வெள்ளையர் பலருளராமே. சரி, சரி; இனி எங்கு போயினும் பயனில்லை." என்றவன் மனம் இயம்பிற்று.

இந்நிலையில் அவன் யாது செய்வன்? அவன் தன்னையு மறந்து பின் வருமாறு சொல்லிக் கொண்டான்.

"திரைகடலே! நினது திரைகளினாலென்னை அணைத்துக் காப்பாயாக! நிறமும், ஜாதியும் கொண்டு மதிப்பிடாத உலகத்தில் என்னைச் சேர்ப்பாயாக! இப் பேருபகாரத்திற்கு வந்தனம்"

கடலிற் பாய்ந்தான் கண்ணப்பன். சில நிமிஷங்களின் பின் அவன் தேகத்தில் சில கயிறுகளள் படுவதுபோல தோன்றியது. "ஆ ஹா! இனி நான் பயப்பட வேண்டியதில்லை பெரிய மீனின் குடல்க ளிடையே, வந்துவிட்டேன் போலும்" என்றெண்ணினான்.

மூடிய கண்களைத் திறந்தான் கண்ணன். தான் கப்பலின் மேற்றளத்தில் கொண்டுவரப் பட்டதை உணர்ந்தான். எதிரில் ஒரு வெள்ளையர் நிற்பதைக் கண்டான். உடனே, கப்பற்றலைவர் பளாரென அறைந்தார் இளைஞன் கன்னத்தில். வசை மொழிகள் பல கண்ணப்பனுக்கு வழங்கப்பட்டன.

மரக்கலம் (இரும்புக்கலம்தான்) விரைந்து வங்கத்தை யடைந்தது. கண்ணப்பன் விசாரிககப் பட்டான். கப்பலில் வெடிகுண்டுகள் வைத்திருந்தானென்றும், ஒரு வெள்ளையரைக் கொன்றானென்றும், அதற்காக தானும் தற்கொலை செய்துகொள்ள முயன்றானென்றும குற்றங்கள் பல சாட்டப்பட்டான் கண்ணப்பன். ஆனால் அவனுக்கு இவ்வுலகினின்றும் விடுதலை கிடைக்கவில்லை.

இன்று யாராவது கண்ணப்பனைக் காண விரும்பினால் அவனைச் சொர்க்கத்தில்தான் காணலாம். எந்த சொக்க்கம் தெரியுமா? சா. ஹென்ரி கிரெய்க் அவர்கள் வர்ணித்த சொர்க்கம்தான். அதுதான் அந்தமான்.

என்னே! இறைவன் செயல். கண்ணப்பன் இந்நிலை தனக்கு வருமென்று கனவிலும் கருதியிரானன்றோ? கிணறு வெட்டப்போய் பூதம் புறப்பட்டதாமே அம்மாதிரி இருக்கிறதே.




(வீ. சங்கர ஐயர்.)

### குஷ்டம் முதலிய சர்ம வியாதிகளுக்கு

(1) நெல்லிக்காய், கந்தகம், மஞ்சள் இவைகளைப் பொடி செய்து தேங்காய் எண்ணெயில் கலந்து பூசவும்.

(2) எருக்கிலை கருக்கி ஒருநாள் வைத்து மறுநாள் தேங்காய்ப்பூ சேர்த்து இடித்து பாலெடுத்து கந்தகம் சேர்ததுப் பூசவும்.

(3) ஊமத்தங்காயைக் குடைந்து உள்ளே ரசம், கந்தகம் இவைகளை வைத்து மூடி ஊமத்தை இலை மூடி சாணி பொதிந்து சுட்டு உள்ளே உள்ளதை எடுத்து எண்ணெயில் சேர்த்து பூசவும்.

(4) ஊமத்தை இலை நீரில் மஞ்சளைப் புழுக்கி அரைத்து வெண்ணெய் சேர்த்துப் பூசவும்.

(5) கதலிப்பழம், வெண்ணெய், இந்துப்பு சேர்த்து அரைத்துப் பூசவும்.

(6) கொன்னையிலை, நெருஞ்சி, புளியிலை, மஞ்சள் இவைகளை மோரில் புழுக்கி அரைத்துப் பூசவும.

(7) சங்கு சுட்ட சாம்பல், சந்தனம் மோரில் கலக்கி தேய்க்கவும்.

(8) மான்தோல் சுட்ட சாம்பலில் வெண்ணெய் சேர்த்துப் பூசவும்.

(9) கந்தகம், ரசம், வெற்றிலை அரைத்து வெண்ணெய் சேர்த்துப் பூசவும.

(10) கந்தகம், வெற்றிலை, சுக்கு, மிளகு, திப்பிலி, வெல்லம் சேர்த்து அரைத்து மாத்திரையாக்கிக் கொடுக்கவும்.

### வாதம், பக்ஷவாதம் தணப்பட

(1) எள்ளு, உழுந்து, சதகுப்பை, வெந்தயம் பாலில் புழுக்கி, தேங் காய்ப் பால் விட்டரைதது தேய்ககவும்.

(2) குந்திமுத்து இலையை காடியில் அரைத்துத் தேய்க்கவும்.

(3) காணம் (கொள்ளு) பால, குறுந்தொட்டி இவைகளாலான கஷா யம் கொடுக்கவும்.

### சூலை, குன்மம், இவைகளுக்கு

(1) அவுரியிலை உலர்த்திப் பொடித்து தேனில் (2) தேங்காய்ப் பாலில் இந்துப்புச் சேர்த்து (3) திப்பிலி மோா விட்டரைத்து தோசைக்கல் மீது வைத்து ஒருநாள் பூராவும் உலர்த்தி மறுநாள் மோரில் கொடுக்கவும்.

(4) முருங்கப்பட்டைச் சாறும், மோரும் சேர்த்துக் கொடுக்கவும்.

### நேத்திர ரோகத்துக்கு

(1) திப்பிலி, தேற்றாங் கொட்டை அரைத்து கண்ணில் போடவும்.

(2) தும்பப்பூவும், இந்துப்பும் தட்டி கண்ணில் பிழியவும்.

(3) முருங்கைக் கொழுந்தும் சந்தனமும் தட்டிப் பிழியவும்.

(4) வசம்பை மூலைப்பாலில் அரைத்து விடவும்.

(5) வெற்றிலை, மிளகு, இந்துப்பு தட்டிப் பிழியவும்.

(6) திப்பிலியும் மஞ்சளும் தட்டிப் பிழியவும்.

### கர்ண ரோகத்திற்கு

(1) ஆமணக்கிலையில் எண்ணெய் பூசி வாட்டி பிழியவும்.

(2) வெற்றிலை இந்துப்புச் சார் பிழியவும்.

(3) கடல் நுரை, உள்ளி எண்ணெயில் போட்டு காய்ச்சி விடவும்.

### பல் வலிக்கு

(1) சுக்கு, எள்ளு பால் விட்டரைத்து எண்ணெய் சேர்த்து காய்ச்சி கொப்பளிக்கவும்.

(2) சுக்கும் கற்பூரமும் தட்டி வலியுள்ள இடத்தில் வைக்கவும்.

### தலை வலிக்கு

(1) வெல்லம், கும்குமம், நெய் சேர்த்து மூக்குவழி சுவாலிக்கவும்.

(2) அறுகைப் புல் தட்டி நஸ்யம் செய்க.

(3) கோரங் கிழங்கு, திப்பிலி, பாலில் அரைத்து பற்றிடுக.

(4) நெல்லிக்காய், மிளகு பொடித்து எண்ணெய் காய்ச்சி தேய்த்துக் குளிக்கவும்.

(5) கோழி இரத்தம் நஸ்யம் செய்க.

### தலைப் புழுவுக்கு

(1) வேம்பின் பட்டை அரைதது போடவும்.

(2) எருக்கின் பாலும் வெண்ணெயும் சேர்த்துப் போடவும்.

### வார்த்தக்யம் நீங்கி யுவத்வமடைய

(1) அதிமதுரம், திப்பிலி, மிளகு, கற்பூரம், பால்முதுக்கக் கிழங்கு, இவை சமம் பொடித்து ஜீனி சேர்த்து சாப்பிடவும்.

(2) நெல்லிக்காய், நெரிஞ்சில் உலர்த்திப் பொடித்து ஜீனி சேர்த்து சாப்பிடவும்.

(3) வெளுத்த குந்துமணிப்பருப்பு சூர்ணம் பாலில் ஜீனி சேர்த்து சாப்பிடவும்.

(4) பால் முதுக்கு, நெரிஞ்சில், நெல்லிக்காய், பூனக்காலி விதை சமம்

இடித்து பொடி செய்து பாலில் ஜீனிப் பாகுவைத்து நெய் சேர்த்து லேகியம் செய்து இரவு சாப்பிடவும்.

### காமாலைக்கு

(1) பசுவின் பாலில் சுக்குப்பொடி நெல்லிக்காய் பொடி சேர்த்துக் கொடுக்கவும்.

(2) கீழ்வாய் நெல்லி ரச மூலம் சாதீர்த்தத்தில் (சோற்றின் ஜலம்) அரைத்து காலை கொடுக்கவும்.

(4) கரிசாரங்கண்ணி, கீழ்வாய் நெல்லி இவைகளின் சார் நெய்யுடன் கலந்து காய்ச்சி ஒரு பாத்திரத்தில் ஜீனிபோட்டு அதன்மீது வடிகட்டி அந்த நெய்யை சாப்பிடவும்.

### ஸ்திரீரோக சிகித்சை

வேப்பமுத்து, ஆமணக்கு முத்து, இவைகளை வேப்பிலைச்சாறு விட்டு அரைத்து மாத்திரை செய்து அதை ஒரு இரவு பூராவும் யோனித் துவாரத்தில் வைத்திருந்தால் சகல யோனி ரோகமும் நீங்கும்.

### பாம்பு கடிக்கு

வாழைத்தண்டு அல்லது கிழங்கின் சாற்றைக் கொடுக்கவும்.

### மயிர் வளர்க்கும் தைலம்

அரைக்கீரை விதை, செம்பருத்திப்பூ மகிழம்பூ, செண்பகப்பூ, வெட்டிவேர். விலாமிச்சவேர், கஸ்தூரி மஞ்சள், பூலாங் கிழங்கு, ஆலம் விழுது, மருவு, தவனம், கதிர்பச்சை வகைக்கு 2 பலம் வீதம் நிழலில் உலாத்தி நறுக்கி இடித்து துணியில் முடிந்து ஒருபடி நல்லெண்ணெயில் போட்டு ஒரு மண்டலம் சூரியபுடம் வைத்து முடிச்சைக் கசக்கி பிழிந்தெடுத்து விட்டு எண்ணெயை உபயோகிக்கவும்.

### தாது விருத்தி மாத்திரை

ஜாதிலிங்கம் 1-பலத்தை முலைப்பால் சரண்டியில் விட்டு காய்ச்சி அதில் போட்டு சுருக்குக்கொடுத்து அத்துடன் அபின் 1-பலம் முருங்கைவிதை 4-பலம் சேர்த்து பசுவின்பால் விட்டரைத்து உளுந்துப் பிரமாணத்தில் மாத்திரை செய்து இரவு படுக்குமுன் ஒரு மாத்திரையை பசுவின் பாலுடன் உட்கொள்ளவும்.

### தாது விருத்தி லேகியம்

மலராத முருங்கைப்பூ 2 படியை நிழலில் உலர்த்தி நெய்யில் பொரித்துக் கொள்ளவும். கருங்குருவை அவல்படி 2. ஆலம்விழுது சூரணம் படி அரை, அபின் 1 தோலா, சாதிக்காய் 2 தோலா, குங்குமப்பூ 1 தோலா இவைகளை மைபோல அரைத்து முழுங்கைவேர்ச் சாறு 1 படி பசுவின்பால் படி 2. நெய் வீசை 1—ல் கரைத்து 2 வீசை ஜீனி சர்க்கரையும் போட்டு அடுப்பிலேற்றி கிண்டி மெழுகு பக்குவத்திற் கீழே இறக்கி ஆறின பின்

1 வீசை தேன்விட்டு கிண்டி வைக்கவும். தினம் இரவு படுக்குமுன் 1 தோலா வீதம் சாப்பிட்டால் தாது விருத்தி, தாதுக்கள் இறுகும் பத்தியமில்லை.

### தாது விருத்தி சூரணம்

கருவேலம்பூ, பட்டை, கொழுந்து, இலை இவைகளை நிழலி லுலர்த்தி சூரணம் செய்து சமம் சர்க்கரை சேர்த்து காலை மாலை திருகடிப் பிரமாணம் சாப்பிடவும். ஒரு வாரத்தில் கைகண்ட பலனைக் காணலாம். வீண் போலி மருந்துகளை வாங்கி ஏமாறவேண்டாம். மருந்து சாப்பிடும் பொழுது ஸ்திரீ போகம் கூடாது. இது மிகச் சிறந்த மருந்து.

### அசுவகந்தி சூரணம்

| | பங்கு |
|---|---|
| அமுக்காரவேர் | 64 |
| சுக்கு | 32 |
| திப்பிலி | 16 |
| மிளகு | 8 |
| மல்லி | 7 |
| பெருஞ் சீரகம் | 6 |
| தாளிசபத்திரி | 5 |
| லவங்கபட்டை | 4 |
| ஏலம் | 3 |
| சிறு நாகப்பூ | 2 |
| கிராம்பு | 1 |

சூரணம் செய்து 144 பங்கு மாஜீனி சேர்த்து தினம் காலை மாலை சாப்பிட இருமல், ஜ்வரம், உஷ்ணம், காங்கை, முதலிய பல வியாதிகள் தீரும். அமுக்கிரா வேரைப் பாலில் வேகவைத்து நிழலி லுலர்த்தி உபயோகிக்கவும்.

### தேஜோ விருத்தி ரசாயனம்

அமுக்கரா வேர் (சுத்தி செய்தது) 20 பலம் சூரணம் செய்து 4 படிப் பால், $\frac{1}{4}$ படி நெய், 10 பலம் சர்க்கரை போட்டு லேகியம் கிண்டவும். மேல் பொடிக்கு லவங்கப்பட்டை, ஏலக்காய், மல்லி, திராக்ஷை, காசூரக்காய், சந்தனம், ஜாதிக்காய், திரிகடு (சுக்கு, மிளகு, திப்பிலி), லவங்கம் கால்பலம் வீதம் சூர்ணித்துப் போடவும். இறக்கி ஆறின பிறகு 10 பலம் தேன் விடவும். பிறகு 15 நாள் நெற் களஞ்சியத்தில் தானிய ஸ்புடம் வைக்கவும். காலை மாலை நெல்லிக்காயளவு சாப்பிடவும். க்ஷயம், காசம், ரத்தபித்தம், பித்த வியாதி, காமாலை, பாண்டு, அக்னி மாந்தம், அஸ்தி சுரம் முதலியவை நீங்கி வீரிய விருத்தி யுண்டாகும்.

### மேக நிவாரணி

கற்பூரம், ஆவாரம் விதை, வேம்பின் பிசின், விளாம் பிசின், கருவேலம் பிசின், முருங்கைப் பிசின், தேத்தான் கொட்டை, வெள்ளைக் குங்கிலியம், அபினி, குங்குமப்பூ, இவைகளை இடித்து பொடிசெய்து திருபலை (கடுக்காய், நெல்லிக்காய், தானிக்காய்) கஷாயத்தில் 8 ஜாமம் அரைத்து சுண்டைக்காய் பிரமாணம் குளிகை செய்து காலையில் தயிரிலும், மாலை தேனிலும் சாப்பிட்டுவர சகலவித மேகங்களும் தீரும்.

### பவழ பஸ்மம்

ஒரு பலம் பவழத்தை உடைத்து 24 மணி நேரம் நன்ருக எலுமிச்சம் பழத்தில் ஊறவைத்து பிறகு அலம்பி கீழாநெல்லியை அரைத்துப் பொதிந்து அதன்மேல் சீலைமண் 3 செய்து காய்ந்தபின் 20 வரட்டியால் புடமிட்டு ஆறினபின் மறுபடி எருக்கின்பால் விட்டு அரைத்து வில்லைதட்டி சீலைமண் செய்து 15 வரட்டியில் புடமிட்டு எடுத்து வைக்கவும். தேனில் அல்லது நெய்யில் சாப்பிட க்ஷயம், உடம்பு உளைச்சல், மேகம் தீரும்.

### குழந்தைகளுக்கு கோரோஜனை மாத்திரை

சுக்கு, கோரோஜனை, திப்பிலி, ஓமம், மிளகு, ஜாதிக்காய், அரத்தை, வசம்பு, உள்ளி, குங்குமப்பூ, சமனெடை முதல்நாள் மணத்தக்காளிச் சார் விட்டும், மறுநாள் வெற்றிலைச் சார்விட்டும் ஒவ்வொரு ஜாமம் வீதம் அரைத்து, பாசிப்பயறு பிரமாணம் மாத்திரைகள் செய்யவும். குழந்தைகளின் வியாதிகளுக்கு தேனில் இழைத்துக் கொடுக்கவும்.

### சுகந்த கூந்தல் தைலம்

சாம்பிராணி, சந்தனத் தூள், மட்டிப்பால், அகிற்கட்டை, ஏலரிசி சமன் எடுத்து பொடி செய்து வேண்டியபொழுது நெருப்பிலிட்டு கூந்தலை புகை பிடிக்கவும்.

### ஊதுவத்தி செய்ய

கதிர்பச்சை, வெட்டிவேர், மருவு, தவனம், பூலாங்கிழங்கு, மட்டிப்பால் கோரைக் கிழங்கு, அகிற்கட்டை, சந்தனம், தாளிசபத்திரி, சடாமஞ்சி, சாம்பிராணி, சமம் தூளாக்கி வஸ்திரகாயம் செய்து பன்னீர் விட்டரைத்து ஊதுவத்தி செய்யவும். இது பூஜா காலத்தில் அதிக வாசனையுள்ளதாக இருக்கும்.

---

# ஆகாசத் திரையின் அதிசயம்

("ராஜாராம்")

அழகான மாலை! இயற்கை அன்னை எழில் மிகும் மாலை! பொன்னிறக் கிரணங்களால் பார்க்கும் பொருள்களெல்லாம் பைம்பொன் முலாம் பூசப் பெற்றவை போல் விளங்குகின்றன. பக்ஷிகள் குதூகலமாகப் பாடிக் களிக்கின்றன. தீவிர வைராக்யம் இல்லாத மனம் போல் ஆகாசத்திரையில் மேகக் குவியல்கள், அநேக உருவம் பெற்று நாடகங்களைத் தொடங்கி விட்டன.

"தாந்தா முன் செய்த வினை தாமே அநுபவிப்பர்" என்பது மூதுரையன்றோ! மனோவேகத்தின் போக்குக்குத் தக்கபடியே இயற்கை நாடகத்தின் காட்சி பயனளிக்கிறது.

சிறுவர்கள் உல்லாசமாக விளையாடுகின்றனர். பாடசாலை வேலை ஒய்ந்து இயற்கைகளைக் கண்டு ஆனந்திக்கிறார்கள். மனோ விகற்பமற்ற ஒவ்வொருவரும் அந்தி வேளையின் காட்சியில் மகிழ்கின்றனர். மனோ விகற்ப முடையவர்களையோ இக் காட்சிகள் துன்புறுத்தா திருப்பதில்லை.

அன்பனைப் பிரிந்த அணங்கும் அழகியைப் பிரிந்த ஆடவனும் வருந்துவது மலரினைத் தேடி ரீங்காரமிடும் வண்டுகள் பறக்கும் அந்தி நேரமன்றோ!

இத்தகைய அந்தி நேரத்தில் ஓர் வாலிபன் "சல சல" வென்று தெள்ளிய நீர் ஓடும் தாம்பிரபரணியின் வடகரை ஓரம் ஓர் இயற்கை மணல் மேட்டில் ஏதோ சிந்தித்த வண்ணம் உட்கார்ந்திருக்கிறான்.

அவனுடைய முகம் களங்கமற்ற தன்மையைக் காட்டுகிறது. மனம் படும் வேதனையை அடிக்கடி முகம் மாறுவதால் அறிகிறோம்.

"ஹே! ஜெகதாம்பிகே! நினது இயற்கை நலன்களைக் கண்டாயினும் ஆனந்திக்கலாமென்று இங்கு வந்தேன்.

ஆ! அந்த மேகத்திரள்கள் எவ்வளவு அழகாக விளங்குகின்றன. பல வித வர்ணம் பெற்று விளங்கும் அக் குவியல்கள் பலவகை உருவும் பெற்றது எவ்வளவு ரமணீயம்!

ஹே கருணாநிதே! ஏன் பிறந்தேன்! மனம் படும்பாடு திருவுளச் சம்மதந்தானோ? இந்த ஆடம்பரங்களெல்லாம் மனச் சோர்வையே அதிகமாக்குகின்றதே! இவை துன்புறுத்தவே சிருஷ்டிக்கப் பட்டனவா? என்னே நின் கைவன்மை! பார்க்கும் பொருள்களி லெல்லாம் உயிர் மணியின் உருவைப் பொருத்திய அருளை நினைந்து களிக்கின்றேன். உற்று நோக்க வஞ்சம் விளங்காமலில்லை. உருவங்களெல்லாம் வெறும் தோற்றமே! இந்த கண் கட்டு வித்தையை எளியனிடமா? காட்ட வேண்டும்! எழிலணங்கின் உருவங்கள் மறைய வெறும் சாரமற்ற பொருள்களாக மாறும்படி செய்வது

ஏனோ! அயர்ந்து கிடக்கும் கண்களை திறக்கச் செய்து அடுத்த நிமிடமே ஒளி இழக்கச் செய்கின்றனையே!

இன்று பௌர்ணமி போலும். அதோ சூரியன் தன் பவனி முடித்ததன் அறிகுறியையும், சந்திரன் பவனி ஆரம்பக் குறியையும் காட்டும் அடிவானச் சிவப்பு இருதிசையும் தோன்றுகின்றது. இது இருதலைக் கொள்ளி எறும்பை ஞாபகப்படுத்துகிறது.

ஊர் வாயை மூட உலை மூடி உண்டா? என் மனம் என்னை அறியாமலே ஏதோ ஓர் சக்தியால் இழுக்கப்படுகிறதே! இதைப் பாழும் உலகம் எப்படி அறியும்? கற்றானை செல் அரிக்காதன்றோ! என் கண்மணியின் மனம் வருந்தா வகை என்று தான் கூடுமோ! அதோ! அந்த மேகத்திரளின் பல வித உருவங்கள் என்னை பரவசப் படுத்துகின்றன.

அதோ அந்த மேகக் குவியல் சூரியனது மஞ்சள் நிறமும் சிவப்பு நீலம் ஆகிய நிறங்களும் கொண்டு சித்திரிக்கப்பட்ட அழகிய கோபுரம் போல் தெரிகிறது.

அப்பப்பா! எவ்வளவு உயரம்! நமது புராதன அரசர்களின் ஆஸ்திக அறிகுறியன்றோ அவை? ஜனங்கள் அரசனிடம் கொண்டிருந்த அன்பின் மிகுதியையும் அக் காலம் தேசம் இருந்த அமைதியையும் நம் தேசம் சிற்பிகள் நிறைந்தது என்பதையும் இது விளக்குகின்றது.

அதோ மேளக்காரர்கள் வருகிறார்கள். என்ன ஆச்சர்யம்! மொட்டைக் கோபுர வாயிலாலன்றோ வருகின்றனர்? ஆ! அதோ வெண்குடையும் சூரிய சந்திர பிரபைகளும் யானைகள் மீது முரசு முழக்கிய மாவுத்தர்களும் எக்காளம் ஊதும் ஏவலர்களும் அதன் வழியாகவே வருகின்றனா.

அதோ! அருணாசலேசர் உண்ணாமுலை யம்மையொடு ரிஷபாரூடராய் வரும் வைபவம் தெரிகிறது. சம்போ! இச் சென்மம் ஈடேறிற்று. நின் திருவுருவைக் கண்ட பக்தர்கள் துன்ப எல்லையைக் கடந்தவராவர். "அருணையை நினைக்க முக்தி" என்பது—ஆன்றோர் வார்த்தை யன்றோ! அருணகிரியின் உயர்ந்த தோற்றமும் உச்சியில் மேகங்களிடையே தோன்றும் தீப வொளியும் "அறிஞர்கள் உலக ஆடம்பரத்தே இருந்த போதிலும் அறிவு குன்றார்கள்" என்பதை போதிக்கிறது.

அருணாசலேசா! நின் திவ்யமங்கள விக்கிரஹத்தை தரிசிக்க கோடானு கோடி மக்கள் சூழ்கின்றனரே!

2

ஆ! அதோ வயது சென்ற ஒரு கிழவியும் கூட்டத்துள் தள்ளாடுகின்றாள். குழிந்த கண்களும் தந்தங்களிழந்ததால் நீண்டு அழகிழந்த முகவாயும் வாழ்க்கையின் சக்கரச் சுழற்சியை ஞாபகப் படுத்துகின்றது கண்கள் மாத்திரம் இரக்கத்தால் அழகு பெற்று விளங்குகின்றன. யாரையோ திரும்பிப் பார்க்கிறாள். அதோ பின்னால் சற்று தளர்ந்த நடையுடன் ஓர் யுவதியும் சிறுவனும் தொடர்கின்றனர்.

அவள் பூர்ண கர்ப்பவதி போலும்! முகம் வெளுத்து வேதனை படுவதையும் தேகம் ஓர்வித நடுக்கத்தால் தளர்வதையும் அறிகிறோம். கால்கள் தள்ளாடுகின்றன. பிளேக் இன்ஸ்பெக்டர் ஒருவர் உடையுடன் வழி மறிக்கிறார்.

யுவதியின் ஜுரம் அதிகரிப்பதைக் காட்டுகிறது. கிழவி மூட்டையிலிருந்து ஏதோ எடுக்கிறாள். யுவதியின் மீது போர்த்துகிறாள். நடுக்கத்துடன் உத்தியோகஸ்தர் பின் செல்கின்றார்கள்.

அதோ தனிக்குடிசை பரிசுத்தமான இடம். இருவரும் உள்நுழைகின்றனர். படுக்கை வசதியும் காண்கிறது. உத்தியோகஸ்தன் திரும்புகிறான். கிழவி மறுபடியும் வெளியே வருகிறாள். கையில் இருப்பது என்ன? ஆ! பச்சிளங் குழவி போலும்! என்ன அழகு! குருவிபோல் வாயைத் திறக்கிறது. ஆச்சரியம்! அவள் முகத்தில் சந்தோஷத்தைக் காணோம். கண்களில் நீர் ததும்புகிறது. சுற்றுமுற்றும் பார்க்கிறாள். அதன் தோளில் ஊசியால் குத்துகிறாளே!

அந்தோ என்ன அநியாயம்! இப்பொழுது தான் பிறந்த சின்னஞ் சிறு சிசு அவளை என்ன செய்தது! ஏன் அப்படி குத்துகிறாள்? ஒன்றும் விளங்கவில்லையே அதோ குழந்தையை அன்போடு பார்க்கிறாள். ஆகாயத்தைப் பார்க்கிறாள். கண்களை மூடுகிறாள்; கடவுளை வேண்டுகிறாள் போலும்.

மூட்டை முடிச்சுடன் யாத்ரீகர் ஒருவர் வருகிறார். கண் மூடி நின்ற கிழவியையும் குழந்தையையும் கவனிக்கிறார். கிழவியின் பரிதாபத்திற்கு வருந்துவதாகத் தெரிகிறது. இருவரும் ஏதோ "குசு குசு" என்று பேசுகிறார்கள். யாத்ரீகர் கையில் இளங் குழந்தை விளங்குகிறது. சந்தோஷத்தால் தேகம் சிலிர்க்கிறது. கண்கள் ஆனந்தக் கண்ணீர் விடுகின்றன.

ஐயோ! பாவம்! கிழவிக்கு துக்கம் தொண்டையை அடைக்கிறது. சீக்கிரம் போகும்படி சைகை காட்டுகிறாள். யாத்ரீகர் குழந்தையுடன் விரைவாக நடக்கிறார்.

அதோ கிழவி உள்ளே செல்கிறாள். தேகம் தள்ளாடுகிறது. யாத்ரீகர் சென்ற திசையையே வெகு நேரம் வெறிக்கப் பார்க்கிறாள். முகத்தில் பரபரப்பு காண்கிறது. அடக்க முடியா, துக்கத்தால் வெளியே வருகின்றாள். குழந்தை சென்ற பக்கம் கால்கள் பாய்கின்றன, தளர்வடைந்து அப்படியே சாய்கின்றாள்.

அய்யோ பாவம்! ஆ ஜகதாம்பிகே! ஆ அந்த சிறு பையன் கிழவி மேல் விழுந்து அழுகிறான். சிறுவன் ஆதரவற்று தனியாகத் தவிக்கிறான்.

முன் வந்த அதிகாரி வருகிறார். கிழவியைக் குனிந்து கவனிக்கிறார். அசையவே காணோம். ஒரு வேளை இறந்து விட்டாளோ என்னமோ? மூக்கருகில் கையை வைக்கிறார். நம்பிக்கையுடன் உள்ளே செல்கிறார். பையனும் கூடச் செல்கிறான்.

வெகு பரபரப்புடன் வெளியே வருகிறார். பையனைச் சமாதானப் படுத்துகிறார். அதோ கையில் விசில் எடுத்து ஊதுகிறா போலும்—நாலைந்து பேர் ஏதோ மருந்துடன் வருகிறார்கள். உள்ளே சென்ற யுவதியின் உடல் சவமாக வெளியேற்றப்படுகிறது.

உடைகளைக் கிரோஸின் விட்டு அதோ ஒருவன் எரிக்கிறான். பையன் சோர்ந்து விட்டான். இந்த அநாதைகள் யாரோ தெரியவில்லை. யுவதி

பிளேக்கினால் இறந்திருக்கிறான். அதைத் தாளாது கிழவியும் இறந்து விட்டாளோ?

அதோ ஒரு வண்டி. கிழவியையும் பையனையும் அதில் ஏற்றுகிறார்கள் என்ன வேகம்! அதோ பெரிய கட்டடம் ஆஸ்பத்திரி போலும்! வண்டி நிற்கிறது கிழவியை இறக்குகிறார்கள்; பையனும் தொடர்கிறான். காருண்ய மான பார்வையுடன் வைத்தியர் கிழவியைப் பரிசோதிக்கிறார். முகம் யோசனையைக் காட்டுகிறது. விரைந்து செல்கிறார். அதோ பெரிய அலமாரி, பல மருந்துகள் விளங்குகின்றன. அவர் கை அலமாரியை நாடுகின்றது. கையில் சிறிய சீசாவுடன் திரும்புகிறார். கிழவியின் மூக்குக்கு நேர் பிடிக்கிறார். தேகம் அசைகிறது; கண்கள் கூட திறந்துகொண்டன. பரிதாப மான பார்வை, ஐயோ! பாவம். கண்ணீர் கண்களை மறைக்கின்றது. சுற்று முற்றும் பார்க்கிறாள்; சித்தப் பிரமைபோல் "கல கல"வென்று சிரிக்கிறாள்.

அதோ அவள் பொக்கைவாய் திறக்கிறது. வெறிக்கப் பார்க்கிறாள். பையன் பாட்டியின் சமீபம் செல்கிறான். ஆ! என்ன அன்பு! அப்படி தழுவுகிறான். முத்தமழை பெய்கின்றது, அவளது பொக்கைவாய். பையன் தவிக்கிறான், மறுபடியும் சாய்கிறாள்.

டாக்டரின் முகம் சஞ்சலத்தைக் காட்டுகிறது. கிழவியின் மூட்டைகளை சோதிக்கிறார். அதோ அவர் முகம் திருப்தியைக் காட்டுகிறது. கையில் ஒரு கடிதம் அதில் என்ன இருக்கும்! ஒருவேளை கிழவியின் இருப்பிடம் கிடைத்திருக்கலாம்.

டாக்டர் மறுபடியும் சீசாவை கிழவியின் மூக்கருகில் பிடிக்கிறார். முகம் தெளி வடைகிறது. முன்னிலும் ஆவலாய் எழுகிறாள். ஆயினும் என்ன? சேஷ்டைகள் நீங்கவில்லை; ஓட முயல்கிறாள்.

டாக்டர், கிழவிக்கு ஏதோ ஒரு கடிதத்தைக் காட்டுகிறார். கிழவியின் முகம் பிரகாசிக்கிறது. இழந்த ஒன்றை பெற்றதுபோல் மகிழ்கிறாள். சரி விளங்கிவிட்டது. கிழவியின் மகள் ஊரிலிருந்து கடிதம் எழுதி இருப்பதாக டாக்டர் தந்திரம் செய்திருக்கிறார், வேறு எதனாலும் கிழவி இவ்வளவு சீக்கிரம் குண மடையாள்.

கிழவி வண்டியில் ஏறுகிறாள். உடையால் தஞ்சாவூர் பக்கத்து பிராமண விதவைபோல் இருக்கிறாள். ஒருவேளை தஞ்சாவூருக்குத்தான் செல்கிறாளோ என்னமோ!

அதோ ரெயில்வே ஸ்டேஷன். கிழவியும் பையனும் ரெயிலேறி விட்டார்களே! ட்ரெயினும் தஞ்சாவூர் பக்கமே புறப்பட்டு விட்டது.

(3)

ஆ மேகத்திரள்களே! ஆண்டவனின் திருமலையை காட்டுகின்றீர்களா! எத்தனை காவடிகள்! ஞானபண்டிதா! நின் மலைக்காட்சியே அற்புதம்! அக் ஞான வியாதிக்குகந்த மருந்தன்றோ நீ!

நின் அபிஷேக அலங்காரங்கள் அன்பனின் மனத்தை உருக்கி "புடம்

போடப்பட்ட பொன்மாற்றில் உயர்வதேபோல்" நற்குணங்களால் சிறப்புறச் செய்யு மன்றோ !

அதோ வரிசையான வீதிகள். நடுவில் அழகாக உள்ளது ஓர் மாடி வீடு. அதன் மேல்மாடியின் முற்றத்தில் மூன்கண்ட யாத்ரீகர் ஓர் ஈஸிசேரில் சாய்ந்திருக்கிறார். வெட்டிவிட்ட மீசை முகத்தை அழகு படுத்துகிறது. நெற்றியில் விளங்கும் திருநீறு அவர் ஒரு சைவவேளாளர் என்று காட்டுகிறது.

பக்கத்தில் யௌவன மங்கை நிற்கிறாள். மரகதநிறச் சேலை அழகை அதிகப்படுத்துகிறது. பைம்பொன் பணி பூட்டப்பட்டு மூன்கண்ட குழந்தை கையில் விளங்குகிறது. உடையால் பெண் குழந்தையென அறிகிறோம். தாயிடம் உள்ள அன்போடு அவளை நோக்கி மகிழ்கிறது. முகம் பூரிப்பால் மலர்கிறது.

குழந்தை கிருஷ்ண விக்ரஹம்போல் தாவுகிறது. தவழ்ந்து ஈஸிசேரை தாவிப் பிடிக்கிறது. நின்று தள்ளாடி நடப்பது எவ்வளவு அழகு! "குழவி தளர்நடையைக் காண்ட லினிதே" என்ற மூதுரை பொய்யன்று. தம்பதிகளின் முகம் இனிமையைக் காட்டுகிறது.

என்னே மாயையின் செழுமை! அதற்குள் பள்ளிப்பருவத்தை யடைந்து விட்டாள். கையில் புத்தகம் பலகை. அதோ பாடசாலைக் கட்டிடம். உபாத்தினி வெகு அன்போடு நோக்குகின்றாள். நமது பெண்மணியின் வெள்ளுடை பாலசரஸ்வதிபோல் அழகு படுத்துகின்றது. காதில் லோலாக், குஞ்சம் வைத்து தொங்கவிட்ட ஜடை, நீலக்கல் மணிமாலை, காலில் தண்டை. எவ்வளவு அழகான காட்சி! அவள் கையில் புத்தகத்தோடு விளங்கி கவனமாகப் படிப்பது உபாத்தினியைப் பரவசப்படுத்துகிறது.

நமது பெண்மணியைச் சுட்டிக்காட்டி மற்றவர்களுக்கு ஏதோ கூறுகிறாள். இவளுடைய திறமையைச் சிலாகிக்கிறாள் போலும்.

ஆதோ மாடிவீடு! வாழை கமுகு அலங்கரிக்கப்பட்ட வானத்தை யளாவும் பந்தல், எங்கும் மாவிலைத் தோரணங்கள், பெரியகூட்டம். ஆண்களும் பெண்களும் அலங்காரமாக பரபரப்புடன் செல்கின்றனர். மேளக்காரர்களின் தேக ஆட்டம் அவர்களின் திறத்தைக் காட்டுகிறது.

நம் சிறுமி கூட்டங்களுக்கு மத்தியில் மணமகளாக விளங்குகின்றாள். அவள் அணிந்துள்ள ஆபரணங்கள் நக்ஷத்திரங்களபோல் பிரகாசிக்கின்றன. நெளிந்து கருத்த கூந்தல் மேகத்தை ஒத்திருக்கிறது. மேகத்திடை தோன்றும் முழுமதியென அவள் முகம் விளங்குகின்றது. சந்திரமண்டலத்தில் பவழத்தீவா அலல அவளுடைய அதரங்களல்லவா அவைகள். புன் முறுவலுக்கிடையே தோன்றித் தோன்றி மறையும் பல்வரிசையின் காட்சியை என்னென்பது!

ஆ! இந்த தெய்வப்பெண்ணை தலைவியாக அடைந்தவன் பாக்யவானே. அவன் முகம் எவ்வளவு அழகு! பிரம்மதேஜஸ் வீசுகின்றதே! பிராமண வாலிபன் போலும்! நம் பெணமணியும் பிராமண உடையுடன் விளங்கின்றாள். சில பிராமணர்களும் வேளாளர்களும் சூழ்கின்றனர்.

அதோ ஆண்டவன் சந்நிதி. மெய்யன்பர்களைக் காக்கும் கருணாநிதே! உன்னை வணங்கும் இத் தம்பதிகளை ஆசீர்வதிக்கிறாயா? நீ என்ன செய்வாய்! மக்களின் வினையின் அளவாகவே வாழ்க்கைச்சக்கரம் சுழல்கிறது. உலக நிகழ்ச்சியில் வினைவலிதோ அருள் வலிதோ என்ற சந்தேகம் உண்டாகாதிருப்பதில்லை. "உன் அருள் முன் வினை என்செய்யும்" என்று பக்தர்கள் இறுமாந்திருப்பர். ஆனால் "ஊழிற் பெருவலி யாவுள?' வினை தன் காரியத்தில் முந்தி விடுகிறது.

முயற்சி குன்றாத மெய்யன்பர்கள் உன்னையே சரணமடைந்து உன் மங்கள விக்கிரஹத்தில் மனதை பதித்திருப்பதால் அவ்வினையி ் சேஷ்டைகளை லக்ஷியம் செய்வதில்லை. மாயையின் அலங்கோலத்தை யாரே மதிக்க வல்லார். நம் சிறுமி யௌவனமங்கை யாகிவிட்டாள். உருக்கி வார்த்த செம்பொன் பதுமைபோல் அதோ கட்டிலில் அசைவற்றுக் கிடக்கிறாள்.

தாமரை போன்ற கண்கள் பாதி மூடப்பட்டிருப்பதும் கருவிழி தோன்றுவதும் தாமரையுள் மொய்த்த வண்டு வெளிவரமுடியாமல் தவிப்பது போல் காண்கிறது.

கருநாகம் போன்று பின்னப்பட்ட கூந்தல், தோள்பக்கம் சரிந்து கிடப்பதும், பூரணசந்திரன் போன்ற முகம் சடையால் பாதி மூடப்பட்டிருப்பதும் ராகுவால் விழுங்கப்பட்ட சந்திரனை ஒத்திருக்கிறது.

வெள்ளைச் சலவைக்கல்லைப்போல அவள் தேகம் இரத்தப் பசையற்று கண்ணாடி போன்று பளபளப்புள்ள கன்னங்களில் கண்ணீர் கறைகளால் சோர்வு காண்கிறது. இவள் திடீரென்று மூர்ச்சை யுற்றிருக்க வேண்டும்.

ஆம் விளங்கிவிட்டது ஆ! என்ன பயங்கரம்! நம்மடவாளின் நாதனின் தேகம் மற்றொரு கட்டிலில் கிடத்தப்பட்டிருக்கிறது. இதைக் கண்டே மூர்ச்சையுற்றாள் போலும்!

அதோ டாக்டர்! நம்பிக்கை இழந்த முகத்துடன் காண்கிறார். அதோ சில பிராமணர். நம் பெண்மணி அநாதையானாள். சவம் வெளியேற்றப்படுகிறது. அதோ சிதை அடக்கியுள்ளது.

மிக்க மேலானதாக மதிக்கப்பட்ட சரீரம் ஒருபிடி நீரும் ஆகாமல் ஒழியும் என்பதை ஞாபகப்படுத்தும் இடம் இதுவே. ஸ்மஸான வைராக்கியம் இங்குதான ஏற்படுகிறது.

இறந்தபின் செய்யும் சவச்சடங்கு அர்த்தமற்றது என்பது நவநாகரீகர்களின் கூத்து. ஜீவனுக்கு மூன்று சரீரம் உண்டென்பர் பெரியோர். சுடுகாட்டில் சாம்பரானது தூலம். சூட்சுமத்தை ஆச்சிரயித்த ஜீவன் இதனுள் வசித்தான். இதுவே ஜீவாத்மா என்பது. இந்த ஜீவாத்மா பரமாத்மாவின் சாயை ஆகும். ஆகவே இது பரமாத்ம வாசஸ்தானமாகும்.

சூட்சும சரீரத்தை ஆச்ரயித்த ஜீவ திருப்திக்காக சவச்சடங்கு செய்யப்படுவது அநுபவ உண்மை என்பது பெரியோர் கூற்று.

தூல சூட்சுமங்கள் தங்க ஆதாரமானது காரண சரீரம். இதில் பல தடவை தோன்றித் தோன்றி மறைந்த தூலங்களுக்கு கணக்கில்லை. சூட்சு

மம் மட்டும் அழியாமல் தொடர்ந்தே வருகின்றது. இதை யெல்லாம் சுடு காடு ஞாபக மூட்டுகிறது.

(4)

அதோ! நம் பெண்மணி ஒன்றும் அறியாமல் படுத்துக் கிடக்கிருள். பக்கத்தில நர்சு ஒருத்தி கவலையோடு கவனிககிருள். அவள் கிருஸ்தவமாதெனை அறிகிறேம். கையில் கண்ணுடிப் பாத்திரம. அதில் உள்ள பாலை அன்புடன் நோயாளிக்குப புகட்டுகிருள்.

ஆ! நம்மட வன்னம் பவழம் போன்ற வாயைத் திறக்கிருள்! கருணை நிதே! இந்த அநாதையைத் தாய்போல் பாதுகாக்கும் அந்த தாதியின் செயல் தான் என்னே!

நம்மங்கை பத்தரைமாற்று பொற்பதுமைபோல் விளங்குகின்ருள். அவளது எழில காட்டில் எரித்த நிலவன்றே! உலக சட்டங்களை வேதத்தே வகுத்தவன் ஒரு தனிமுதல்வனென்று கூறுவது உண்மையானுல் இவ்ளுக்கு எழிலை வளரச் செய்வது ஏன்? நாதனற்ற நங்கையின் அழகு காளகலா நாள் பூத்த நன்மலர்போல் அழிவதன்றே! அதோ ஒரு கட்டிடம. அதன் தோற்றத்தால் மாதா கோவில் என அறிகிறேம். எவ்வளவு பரிசுத்தமான தோற்றம்! எல்லாம் தூய வெள்ளுடைகள். ஆண் மக்களும் பெண் மக்களும் அணியணியாக நிற்கின்றனர். பாதிரியார் நடுநாயகமாய் விளங்குகிருர்.

என்ன ஆச்சரியம்! அதோ நம் பெண்மணி மருண்ட பார்வையுடன் நிற்கின்ருள. முகம் ஆஸ்திகத்தைக் காட்டுகிறது. தாதியோடு ஏதோ பேசுகிருள். முகம் மாறுதலடைகிறது; தாதி சமாதானம் சொல்கிருள். நம் மடவாள் வெறுப்படைகிருள்.

விளங்கிவிட்டது. தாதியின் சொற்படி கோவிலுக்கு வந்திருக்கிருள். இந்துக்களின கோவில் சின்னங்களாகிய விக்கிரகங்களையும் அபிஷேக அலங்கார அர்ச்சனைகளையும் காணுமல் இது கோவில் அல்ல என்று கருதுகிருள். கண்கள் பரிதாபத்தைக் காட்டுகிறது. வெளியே செல்ல முயல்கிருள்.

அதோ பாதிரியார் கையை உயர்த்தி ஏதோ சொல்கிருர். நம் பெண்மணி கவனிக்கிருள். கூப்பிய கைகளுடன் தலை வணங்குகிருள். ஏதோ ஒரு பத்திரம் வாசிக்கப்படுகிறது. அதில் நம்மடவாள் கையெழுத்திடுகிருள். ஞானஸ்நானம் பெற்ருள்போலும்.

அதோ ஒரு மோட்டார் பறந்து செல்கிறது. கார் நிற்கிறது. வெள்ளுடையுடன் மாதர்கள் இறஙகுகின்றனர். என்ன காட்சி! மோட்டாரில் சென்ற தும்பை மலர்கள் அதன் வேகம் தாங்காது இழிந்ததை யொததிருக்கிறதே!

அதோ ஒரு மருத்துவ பாடசாலை. நம் பெண்மணி பழய மாணவி வாழ்க்கையை ஆரமபித்துவிட்டாள். நர்ஸ் தொழிலில் பழகுகின்ருள் போலும். காதனற்றவாகள் பயங்கர உலகில் ஏதாவது ஓர் தொழிலை ஏற்காமல் என்ன செய்வது?

ஆ! என்ன ரமணீயம்! என் கண்மணியின் தோற்றமன்றே இது. ஏ!

எழிலினங்களே! என் மனப்பான்மை யறிந்து என துயிர் மணியைக் காட்டு கிறீர்களா? இப்போதுதான் மலர்ந்து மூகரப்படாத மலர்போல் முகம் பொலி வுற்று விளங்குகின்றதே!

அன்று ஆபீசிலிருந்து வந்தபோது நேர்ந்த விபத்தில் காப்பாற்றிய உயிர் மணியன்றோ இவள். என்ன செய்வேன்! இந்த முகத்தில் ஓர் கவலை உறுத் திக்கொண்டிருக்கிறதே!

"நதிகள் பலவும் செல்லும் மார்க்கம் வேறாயினும் முடிவில் சமுத்திரத் தையே அடையும். உலகில் உள்ள பல மதங்களும் கடவுளை அடையும் பல வழிகளே." இந்த உண்மையை எத்தனை நாள் சொன்னாலும் வருந்தும் என் ஹிருதய மணியின் கவலையை என்றுதான் போக்குவேன்!

நான் யார்? என்னை யறியாமல் உளத்தில் பதிந்த இப்பெண்மணிதான் யார்? இவள் துயரை எண்ணும்போது இரத்தம் கொதிக்கிறதே. முகச் சாயலுமா ஒத்திருக்கவேண்டும்!

தங்கையைப் பற்றி பாட்டி கூறியது ஞாபகம் வருகிறது. ஓ! இருக் காது! அவ்வளவு பாக்கியசாலியா யான்! இத்தனை நாள் பழகியும் அந்த அடையாளத்தைக் கவனிக்கவில்லையே! இங்கு மாற்றப்பட்டபின் இன்னமுதை காணவும் இல்லையே! இன்றே செல்கிறேன்.

மேகத்திரள்களே! நீங்கள் காட்டிய காட்சி மாத்திரம் உண்மையாக இருந்தால், கைம்மாறு கருதாது உதவுபவர் என்ற பெயர் மிகப் பொருத் தமே! பிரம்மஞான சபையார் கூறும் "குப்த ரகஸ்யம்" இதுதானோ!

என் உயிரனைய சாந்தா! லோகமாதாவின் அருளால் நீ மாத்திரம் இப் போது இங்கு வந்தால்........" என்று துக்காக்ராந்தனாய் மணல் மேட்டில் சாய்ந் தான் முன் கூறிய வாலிபனாகிய ஞானப்ரகாசம்.

அப்பொழுதே வந்துகொண்டிருந்த சாந்தாமணி கீழே விழாமல் தாங்கி "ஆ ப்ரகாஸ்! என்ன உடம்பு; தனி வாழ்க்கையில் பிரியம்போலும்!" என்று புன் முறுவலோடு கூறினாள்.

"என் இன்னுயிரே! தேவி என் பக்கம் இருக்கிறாள். நான் கண்டது உண்மையே! நீ அநாதையல்ல, இதோ சோதித்துவிடுகிறேன்" என்று கூத் தாடலானான் ப்ரகாசம்.

சாந்தா பயந்து, "என்ன செய்வேன்! இவர் படும் வேதனை என்னால் பொறுக்க முடியவில்லையே! அந்நியனாகிய யான் இவரைத் தனிமையில் காண வந்தது பெருந்தவறு. பாழும் மனம் ஒரு கணமும் இந்த உருவத்தை மறக்கவில்லையே. அங்கு இரேனென்று இழுத்துவந்து விட்டதே! தெய்வ சக்தியே என்னை இவரோடு பிணைத்திருக்கிறது.

"இவர் கூறுவதில் ஏதாவது அர்த்தமிருக்கும். வீண் வார்த்தை பேசும் வழக்கம் இவரிடம் இல்லையே! என் வளர்ப்பு தந்தை வேளாளராயினும் பிரா மணருக்கே என்னை வாழ்க்கைப்படுத்தினார். என்னை யாரிட மிருந்தோ பெற்றதாகவன்றோ கூறினார். சகோதரன் ஒருவனும் இருந்ததாகக் கூறி

ளுரே!" என்று எண்ணமிட்டுக்கொண்டே "ஆ! ப்ரகாஸ் எதைக் கண்டீர்! எதை சோதிக்கப்போகிறீர்? சீக்கிரம் என் கலக்கத்தை மாற்றும்" என்று வேண்டினன்.

"அன்புள்ள தங்காய்! ஆம் இனி எனக்கு சொந்த தங்கைதான் நீ. எங்கே உன் இடது தோளைக் காட்டு" என்ருன் ப்ரகாசம்.

"ஆ! அண்ணு! இதோ அடையாளம்! இதன் அர்த்தம் என்ன? நான் அநாதை இல்லையே" என்ருள்; ஆனந்த மிகுதியில் அப்படியே சாய்ந்து மூர்ச்சையானுள் சாந்தாமணி.

பக்கத்தில் ஓடிய ஜலத்தை முகத்தில் தெளித்து மூர்சை தெளிவித்து "தங்காய்! நம் தாயின் பெயர் ஞானம்பிகை என்பது. அதன் முதலெழுத்து உன் தோளில் குத்தப்பட்டிருக்கிறது. உன்னைத் தேடி உலகெங்கும் திரிந்தேன். கடவுளாக உனக்கு ஓர் ஆபத்தை உண்டுபண்ணி உன்னைக் காணும் பாக்யத்தை அளித்தார்" என்று தேற்றினன் ப்ரகாசம்.

"அண்ணு! இதுவரை அநாதை யென்று நிம்மதியாக இருந்தேன். "தங்கள் தங்கை ஓர் கிருஸ்தவ மாது" என்ற பழிப்பை உங்களுக்கும் தேட ஆரம்பித்துவிட்டேன்" என்று வருந்தினள் சாந்தா.

"அருமைத் தங்காய்! வருந்தாதே. இன்றே ஆரிய சமாஜத்தாரின் அருளால் நீ ஒரு ஹிந்து என்ற சுதந்தரத்தை அடையலாம். சர்வேஸ்வரனை அடைய உண்மையான மதம் மனமே ஒழிய வேறன்று. இதை நம்பு" என்று தேற்றினன் ப்ரகாசம்,

இனி இருவரும் பிரிந்திருக்கும் அவசியம் இல்லை. உலகமும் உண்மை அறிந்து அபவாத மொழிகளை வாபீஸ் வாங்கிக் கொண்டன.



# மதி மிகுந்த குயில்கள்

———:(o):———

(கோட்டாறு-தே. ப. பெருமாள்.)

பரந்த உலகிடைப் பரிதியஞ் செல்வன்
விரிந்த வொளியை விலக்கிய வண்ணம்
மேற்றிசைப் பாங்கர் மூழ்கும் வேளை
சேற்று வயலது சிறந்திடு கரையில்
வலிவுடன் நின்ற வாகை மரத்தில்
நிலைபெற் றமர்ந்த சிறுகுயி லொன்று
தனிமையில் வாடி தந்துணை காண
இனித்திடு குரலா லின்னிசை கூவியும்
பேடை வராதே பிறந்த மயக்கால்
ஆடிய கொம்பிடை யவல மூற்றிருப்ப, (10)
ஆங்கொரு பாங்க ராடி யாடி
தாங்கிடு மறைவு நீங்கா வண்ணம்
கரந்த செலவிடைக் கருத்தை யூன்றி
திரிந்த பேடையும் ஆணை யடைய
கண்டிடு கருங்குயில் காதல் துணைவியின்
சுண்டிய முகத்தையும் சோர்ந்த வரவையும்
கண்டு கலங்கி கருமுகங் கொண்டு
உண்ட துயரினை உரையா யோவென,
உரைக்கப் புகுந்த பேடைக் குயிலும்
விரைய லெடுத்து வெதும்பி யழிந்து (20)
மூச்சுத் திணறி முகமும் வியர்த்து
பேச்சு மழிந்து பின்னே யுரைக்கும்
"நாதா! கேளும்; நன்கு பகர்வேன்
ஏது மறியா யெளியன் யானும்
உம்மைத் தேடி உலகைச் சுற்றிய
வெம்மை தீர வேட்கை கொண்டு
பெருமர மொன்றி லிருக்கை யெய்தி
அருகச் செய்தே னவ்வழி சூட்டை.
அவ்வம யமதி லவ்வழி வந்த
செவ்வில் மேனியன் சிலையோர் வேடன் (30)

என்னைக் காண தன்கை யம்பை
என்மிசை விடலும் யானு மஞ்சி
சற்றே விலகிட சரிந்த வம்பும்
மற்றொரு திசையில் மாறிப் பாய
கடிதினில் பறந்தேன் கருமமு மறந்தேன்
இடித்தே உள்ளம் என்னை வெதுப்ப
ஏங்கி மயங்கி வீங்கி யழுது
தாங்கரும் துயரால் தன்னிலை மறந்து
ஈங்கு வந்தே னும்மையுங் கண்டேன்
தாங்கு மூகத்துய ரிதுவே'' யா மென (40)

இன்னிசைப் பேடை இயம்புதல் செய்ய
உன்னிய ஆணும் உளமிக நொந்து
"என்னே மககள் இழிவுறு செய்கை!
கொன்னே நம்மைக் கொல்லுத லேனோ?
மக்கள் துன்பிடைத் துயுறு வேளை
தக்க இன்பம் அளிப்பதும் யாரோ?
தாங்கரும் துயரில் தவித்திடு மகனும்
தீங்குர லின்னிசை கேட்ப னயின்
ஆங்கவன் துயரை அழிபப னன்றோ!
ஈங்கிது செய்தலும் நாமே யன்றோ? (50)
நன்றியை மறந்து நவை பட வாழல்
குன்றாப் பழியைக் கொடுக்கு மென்றே
அன்றே யறிஞர் அறைந்து செல்ல
இனறே மக்கள் நடப்பது மென்னே!
புனல தழுக்கைப் போக்கு மிந்த
இனச்சிறு மீனை இரையெனக் கொள்வார்
பாலை யீந்திடு பசுவைக் கொல்வார்
வாலைக் குழைத்திடு நாயை யெறிவார்
செலவின் விரைவினை சிறக்கக் காட்டும்
உலைவிலா சிற்றி லூரக கொல்வார் (60)
இன்னுங் கொல்வார் எண்ணிலா வுயிர்களை
சொன்னு லவைபும் சோரச் செய்யும்''
என்றே ஆணும் இசைக்க, பேடையும்
"ஒன்று சொல்வேன் ஊன்றிக் கேளும்

பண்டு ஒருநாள் பரிதியஞ் செல்வன்
அண்டி நடுவ ணடையும் வேளை,
முரசொலி கேட்டேன் மிக்கிருட் காவில்
விரைந்தங் கடைந்தேன் வேட்கை யரும்ப
அடர்கிளை யொன்றி னிடையே புக்கு
இடைவிடா தெல்லா மிருந்து கண்டேன் (70)

வன்கல் மண்டபம்; வகுத்த பேய்ச்சிலை;
தன்முன் பரந்து தங்கிய பொருட்கள்
தெங்கின் காய்கள்; தீங்கவின் வாழையின்
மங்காக் குலைகள்; மாதுளங் கனிகள்;
கண்ணைப் பறித்து கருத்தைக் கவரும்
வண்ணஞ் சான்று வளர்ந்த கரும்பு;
காற்றிசைப் பாங்கரும் நறுமணம் நன்கு
காற்றொடு கலக்கும் கவினெலு மிச்சி;
பொன்னிறங் கொண்ட பூவெழில் வருக்கை;
நன்னிறங் காட்ட நலமுறப் பழுத்த (80)

தீஞ்சுவை மாங்கனி; திராட்சைப் பூங்கனி;
பூஞ்சுளை யீந்தை; பிறவும் பலவொடு
மயக்க மதுவும் மண்டி யிருந்தன.
பயக்கு மழகில் பார்வை செலுத்தி
மக்கட் கூட்டம் மிடைந்து வளைந்து
மிக்க வொலியை யெழுப்பி நிற்ப,
நடுவண் புகுந்த தடிய னொருவன்
அடித்து வீழ்ந்து ஆட்டங் கொண்டு
பலவும் பிதற்றி படுமது வருந்தி
குலையும் நடுங்கக் கூக்குர லிட்டான். (90)

கூடிய மக்கள் குரலை யொடுக்கி
தேடிய சாமியும் திரும்பிய தெனவே
பக்தி உளமொடு பயந்து வொதுங்க,
சக்தி கேட்டான் சடுதியில் கொணர்வாய்!
என்றே முன்ன ராடிய தடியன்
குன்றிய குரலொடு கோழிகள் பத்து
கொண்டா வென்றான் குழுமி யோரிடை

அண்டி நின்ற ஐயிரு புள்ளும்
அடுத்தே வந்தன அவக்கொலை யெய்த.
எடுத்தான் கத்தியை இருள்மனத் தடியன் (100)
கழுத்தினைப் பிடித்திட கழறிய வொருவன்
இழுத்துப் பிடிக்க இருங்கொலை செய்தான்
குருதி யாறு கிளைபல தொடுத்து
பெருகி யெங்கும் பரந்து ஓட,
தலையறு பட்ட தீவினைப் புட்கள்
நிலத்து வீழ்ந்து நெடுகத் துள்ளி
ஆவி யொடுங்க அசைவு வொழித்தன
மேவிய புள்ளு மெண்ணிய தென்னே!
மக்க ளென்பார் மடநெஞ் சுடையார்
தக்க நூற்கள் கற்றவர் பின்னும் (110)
இக்கொலை செய்ய இசைந்தே நிற்பர்
மிக்க இன்பம் வருவ தறிந்தும்
அறத்தினை வளர்க்கார் அன்பினைப் பெருக்கார்
திறத்துத் தீவினை திருந்தியே செய்வார்''
என்றே இசைக்க இருந்து கேட்ட
வன்றிற லாணும் வருந்தி வாடி
மக்கள் மாண்புடை மதியைப் பெற்றும்
இக்கொடு வினையால் இழிவே கொள்வார்.
இன்னே காண்பாய்! இசை நிதிக் கொழுந்தே!
தன்னிக ரில்லாத் தனிப்பெரும் வானில் (120)
பொன்னிகர் நல்ல புதுவொளி வீசி
மினனி யெழுந்தான் மதியார் மதியன்.
இல்லஞ் செல்வோம் இனியே நாமும்
பொல்லாப் பொழுதும் போயது காணாய்!
என்றே கூறி யெழுந்து பறக்க
நன்றெனப் பேட்டையும் நல்லாண் பின்னே
தொடுத்துப் பறக்க தொலையமை இல்லம்
அடுத்துப் போதர அடைந்தன வங்கே.

---

# ஆண் பெண் சமத்துவம்

(0)

("சூரபி.")

ஒரு ஜாடியும் சட்டியும் குயவன் கடையில் விற்பனைக்கு வந்திருந்தன. அப்பொழுது ஜாடி சட்டியைப் பார்த்து, "ஓ இழிந்த சட்டியே! உனக்கும் எனக்கும் எவ்வளவு வித்தியாசம்! என்னைப் பணக்காரர்கள் வாங்கிக்கொண்டு போய் அந்தஸ்தாக வைப்பார்கள். உன்னையோ உலோகங்களினால் செய்த பாத்திரங்களை உபயோகிக்க சக்தியற்றவர்களாகிய ஏழைகள் வாங்குவார்கள். என் அருகில் உட்காரவும் உனக்கு வெட்கமில்லையா?" என்றது. அப்பொழுது சட்டி, "ஏன் அகாரணமாக என்னை தூஷிக்கிறாய். உனக்கும் எனக்கும் உருவத்தில் மாத்திரம்தான் வித்தியாசம். இருவரும் ஒரே குழியில் இருந்தோம். ஒரே குயவனால் வெட்டி எடுக்கப்பட்டோம். ஒரே தண்ட சக்கரத்தில் சுழன்றோம். இப்பொழுதும் ஒரே கடையில்தான் இருக்கிறோம். உடைந்தால் இருவரும் எடுத்து எறியப் படுவோம் இதற்காக ஏன் கர்வப்படுகிறாய்?" என்று விடையளித்ததாம்! ஆணுக்கும் பெண்ணுக்கும் ஜாடிக்கும் சட்டிக்குமுள்ள வித்தியாசம்தான் இருக்கிறது ஒரேமாதிரி சந்தர்ப்பங்களில்தான் இருதிறத்தாரும் ஜனிக்கின்றனர். சுமார் 5, 6-வயது வரையில் (நம்முடைய நாடுகளில்) ஒரேமாதிரியாக வளர்கின்றனர். குழந்தைப் பருவத்தில் ஒரேமாதிரியாகப் போற்றப்படுகின்றனர். இறந்து விட்டால் ஒரே மாதிரியாக புதைக்கவோ, தகனம் செய்யவோ நேரிடுகிறது. இவ்வளவு ஒற்றுமைகளிருந்தும் உருவ வேற்றுமை யிருப்பது கவனிக்கத்தக்கது. ஜாடியும் சட்டியும் ஒன்றுதான்; ஆனால் உருவ வித்தியாசம் ஜாடிக்கு மேன்மையையும் சட்டிக்குத் தாழ்வையும் அளிக்கிறது. அதே போல் மனிதர்களிலும் ஆணுக்கு இருக்கும் சில சுதந்திரங்கள் பெண்ணுக்கு இல்லை.

ஒரே தச்சன் மேஜையையும் நாற்காலியையும் செய்கிறான். மேஜைக்கும் 4-கால்கள், நாற்காலிக்கும் 4-கால்கள். அனேகமாக இரண்டும் ஒரே மாதிரிலும் செய்யப்பட்டிருக்கலாம் ஆனால் மேஜை எழுதுவதற்கும், நாற்காலி உட்காருவதற்கும் உபயோகமாவது யாவரும் அறிந்ததே ஒரே தட்டான் இரண்டு ஆபரணங்கள் செய்கிறான். இரண்டிலும் தங்கத்தையும் வைரத்தையும் இழைக்கிறான் ஆனால் ஒன்று காதணியாகிறது. மற்றொன்று மூக்கிலணியத் தக்கதாகிறது. இந்திய ரப்பரினால் இரண்டு விளையாட்டுச் சாமான்கள் ஒரே மனிதன் செய்கிறான். உருண்டை வடிவமாக்குகிறான். மற்றொன்றை நீட்டி நடுவில் ஒரு சிறிய பொத்தல் ஏற்படுத்துகிறான். முன்னது 'பந்து' என்னும் பெயர்பெற்று காலால் உருட்டப்படுகிறது, மற்றொன்று அமுக்கினால் 'கீச் கீச்" என்று சப்தமிட்டு சிறு குழந்தைகளுக்கு பயத்தையோ சந்தோஷத்தையோ கொடுக்கிறது. உருவ வித்தியாசம் எவ்வளவு வேற்றுமையை உண்டாக்குகிறது பார்த்தீர்களா?

மேஜையை சாதாரணமாக எழுதுவதற்கு உபயோகிப்பார்கள். ஆனால் அனேக இடங்களில் அது உட்காரும் ஆசனமாகவும் பயன்பட வில்லையா? எனக்குத் தெரிந்த அனேக உபாத்தியாயர்கள் பிள்ளைக்குப் பாடம் கற்பிக்கும் பொழுது மேஜைமேல் உட்கார்ந்து கொள்ளுகிறார்கள் நமது வீட்டிலும் நாற்காலிகள் வேறு வேலையாக விருக்கும்பொழுது யாராவது புது மனிதர்கள் வந்தால் மேஜையில் உட்கார வைப்பது சகஜந்தானே! அதேபோல பள்ளிக் கூடத்திலிருக்கும் பெஞ்சிகள் பிள்ளைகள் உட்காருவதற்காக செய்யப்பட்டன. ஆனால் பாடம் படித்துக்கொண்டு வராதவர்களையும் வேறு குறும்பு செய்பவர் களையும் உபாத்தியாயர் பெஞ்சியின்பேரில் ஏறி நிற்கச் செய்வதில்லையா? நம் வீடுகளில் உயரமாக வைக்கப்பட்டிருக்கும் வஸ்துக்களை எடுப்பதற்கு மேஜையோ, அல்லது பெஞ்சியோ போட்டுக்கொண்டு ஏறுவதில்லையா? ஆகவே மேற்கூறிய வஸ்துக்கள் வழக்கமாக ஒருவிதமாக உபயோகப் பட்டாலும் விசேஷமாக வேறு விதமான உபயோகமும் கொடுக்கிறது.

பெண்மக்களுக்கும் ஆண்மக்களுக்கு அளிப்பது போன்ற சௌகர்யங் கள் அளித்தால் அவர்களும் மேன்மையாக விளங்குவார்கள் என்பதும், சிற் சில உதாரணங்களினால் பெண்களே இன்னும் அதிக சக்தி வாய்ந்தவர்கள் என்பதும், ஆண்மக்கள் செய்யும் அபூர்வ செய்திகள் (ஆகாய விமானம் செலுத்துவது, நீச்சு முதலிய போட்டிகளில் கலந்துகொள்வது......) பெண் களாலும் இயலும் என்பதும் கூறுவதில் பயனில்லை. பெண்களே உயர்ந்த வர்களாக விருந்தபோதிலும் அவர்கள் இவ் விஷயங்களில் தலையிட்டுக் கொள்வது நியாயமா என்பதைக் கவனிக்கவேண்டும். சரோஜினி தேவியார் ஆங்கிலத்தில் கவிகள் எழுதினார். பெஸண்டு அம்மையார் தியசாபிகல் சங் கத்தை இந்தியாவில் ஸ்தாபித்து அனேக வருஷ காலமாக அதற்குத் தலைவி யாக விருந்து வந்தார். மற்றொரு மாது டென்னிஸ் விளையாட்டில் புருஷ னுடன் போட்டியிட்டு வெற்றிபெற்றாள்......எல்லாம் வாஸ்தவந்தான். ஆனால் இதிலிருந்து ஒவ்வொரு பெண்ணும் சரோஜினி தேவியைப்போல் பண்டிதை யாக முடியுமோ? ஆயிரத்தில் ஒருவர், இருவர்தான் எந்த ஊரிலும், எச் சமயத்திலும் முன்னணியில் நிற்பர். ஆண் மக்களிலும் அனேக கவிகள். ஆகாய விமானிகள்; கப்பற்படைத் தலைவர்கள், ராஜீய தந்திரிகள் இருந்தாலும் ஒவ்வொரு ஆண் மகனும் இந்தப் பதவிகளைம்பெற முடியுமென்பதல்ல. நடாத் துபவர். ஒருவர்தான் இருப்பர் நடத்தப்படுவர்கள்தான் ஆயிரக்கணக்கில் வேண்டும். ஒரு சேனைக்கு ஒரு தலைவன் இல்லாமல் இரண்டுபேர் இருந் தால் அனர்த்தந்தான்.

நல்லது, ஆணும் பெண்ணும் ஒரே வேலைகளைச் செய்ய சக்தி வாய்ந்தவர் கள் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். இருவரும் அவைகளை கலந்தாற் போல் செய்வது அவசியமா? எப்பொழுதும் வேலைகளைப் பங்கிட்டுக் கொண்டு செய்வதே நலம். நமக்கே வண்ணான்வேலை, சகிலவேலை, குய வன்வேலை...யெல்லாம் தெரியும் என்று வைத்துக்கொள்வோம். எல்லா வற்றையும் செய்துகொண்டு நமது உத்தியோகத்தையும் பார்த்துக்கொள்ள நம்மால் இயலுமா? (காலையில் முகக்ஷவரம் செய்து கொள்வதே எவ்வளவோ நேரம் பிடிக்கிறதே. அறுந்துவிட்ட செருப்பையும் தைத்துப் போட்டுக் கொண்டு வெளியில் கிளம்ப வேண்டுமென்றால் சாத்தியமா?) ஆதலால் ஆணும் பெண்ணும் ஒரே வேலைகளைச் செய்வதைவிட வெவ்வேறு வேலை

கள் செய்வது குடும்பத்திற்கு நல்லதா, அல்லது ஒரே வேலை செய்வது நல்லதா என்பதை யோசிப்போம். உதாரணமாக, புருஷன் மாத்திரம் வேறு ஊருக்குப் பிரயாணம் செய்கிறான் என்று வைத்துக்கொள்வோம். அப்பொழுது மனைவி அவனுக்கு உதவி செய்ய முடிவதுபோல, இரண்டுபேரும் போவதாக விருந்தால் செய்ய முடியுமா? இருவரும் புறப்படவேண்டி யிருந்தால் அவரவர்கள் தங்களுக்கு வேண்டியவைகளைத் தயாரிக்க முடியுமேயன்றி ஒருவர் மற்றவருக்குச் செய்வது என்பது முடியாது. எனவே, ஒருவர் வீட்டுவேலைகளையும் மற்றவர் வெளிவேலைகளையும் பார்த்து வருவதே கிரமம். பெண்களின் அங்கவமைப்பும் அவர்களே செய்யக்கூடும் என்று கடவுள் விதித்திருக்கும் செயல்களையும் யோசிக்குங்கால் வீட்டுவேலைகளைக் கவனிப்பதற்கென்றே பெண்கள் படைக்கப்பட்டனரென்று திட்டமாகக் கூறலாம்.

நிற்க, பெண்கள் தாழ்ந்தவர்களாக நடத்தப்படுகின்றனரா வென்பதைக் கவனிப்போம். முதலாவது அவர்கள் வீட்டிலிருக்க வேண்டுமென்று நியமித்தது. இரண்டாவது, அவர்கள் வேலை செய்யச்சென்றால் ஆண் மக்களை விட குறைந்த கூலி கொடுப்பது. மூன்றாவது, அவர்களுக்கு சொத்துரிமை கொடுக்காதது...இவைகளைத்தான் முக்கியமாக அவர்கள் எடுத்துக்காட்ட முடியும். வீட்டிலேயே இருக்கவேண்டும் என்ற விதி முன்காலத்தில் ஏற்பட்ட போதிலும் அது இக்காலத்தில் யாரும் அனுஷ்டிப்பதில்லை. எக்காலத்திலும் பெண்கள் கோயில் குளங்களுக்குப் போவதும், கதை காலக்ஷேபங்களுக்குச் செல்வதும் தடுக்கப்படவில்லை. நடுவில் மகம்மதிய படையெடுப்பினால் ஆண் மக்களுக்கே பயமாக விருந்ததால் பெண்களை ஆபத்தினின்றும் நீக்க வீட்டிலேயே இருக்கச் செய்தனர். தற்காலத்தில் அவர்கள் உல்லாஸமான பொழுது போககிடங்களுக்குச் செல்வது சகஜமாகி விட்டது. முக்கியமாக அவர்களை வீட்டிலிருக்கச் செய்வதற்குக் காரணம் குழந்தைகளைப் பராமரித்து பிற்காலத்துக்கு நல்ல மாந்தரை யளிப்பது தான். வெளியில் சென்று உழைத்து சாப்பாட்டிற்கு வழி தேடும்படியான கஷ்டவேலையை புருஷன் செய்யும்படியும் வீட்டில் இருந்து கொண்டு புருஷனுக்கும் குழந்தைகளுக்கும் சிசுருஷை செய்யும் சாதாரண வேலையைப் பெண்களுக்கும நியமித்தது பக்ஷபாதமா?

கூலி வேலை செய்யும் பெண்களுக்கு ஆண்களை விட குறைந்த ஊதிய மளிப்பதற்குக் காரணம் பெண்களுக்குக் கஷ்டமான வேலைகளைக் கொடுப்பதில்லை என்பதே. அநேகமாக வெளியில் வேலை செய்யும் பெண்கள் வீட்டிலும் வேலை செய்ய வேண்டியிருக்கும் என்பதைக் கருதியே அவர்களுக்கு சாதாரணமான வேலைகளை யளிப்பது. அந்த வேலைக்குத் தகுந்த கூலி கொடுத்தால் கோபித்துக் கொள்வதில் என்ன பயன்? சொத்துரிமை விஷயத்திலும் பக்ஷபாதமில்லை. தகப்பனார் வீட்டிலிருக்கும் பெண் விவாகமானவுடன் அவன் புருஷன் வீட்டைச் சேர்ந்தவளாகிறாள். சிறு வயது முதலே ஒருவருடைய பாதுகாப்பிலுள்ள ஒருவருக்கு தனி சொத்து ஏன்? நமக்குக் கஷ்டம் நேர்ந்தால் அதைப் போக்க துவஜம கட்டிக் கொண்டு மற்றவர்க ளிருந்தால் நாம் கவலையற்றிருககலா மன்றோ?

மொத்தத்தில் எல்லாவற்றிற்கும் நமது மனம் தான் காரணம். எல்லா இடங்களிலும் சுகமும் உண்டு; கஷ்டமும் உண்டு. கவர்னர் பதவியை எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு விதமாகப் பார்த்தால் அதிலுள்ள சுகங்கள்

கணக்கிட முடியாது. இன்னொரு விதத்தில் அந்தப் பிழைப்பு அதிக உபத்திரவம் கொடுப்பது போல் தோன்றும். அதுபோல, பெண்களும் வேண்டுமென்று தங்களைத் தாழ்த்திவைத்திருப்பதாக எண்ணி வருந்துகிறார்கள். இக்கரைக்கு அக்கரை பச்சை என்பதுபோல் தற்போது புருஷர்கள் செய்யும் வேலை அவர்களுக்குச் சுகம்போல் தோன்றும். ஆனால் தற்சமயம் அம்மாதிரி வேலையில் ஈடுபட்டிருக்கும் மாதரே அதன் உண்மை நிலைமையை அறிவிப்பர்.

நமது நாட்டில் பெண்களை இழிவாகக் கருதவில்லை. 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்னும் முதுமொழியில் அன்னைக்கு முதன்மையளித்திருக்கிறது. 'பாழே மடக்கொடி இல்லா மனை' யென்பதில இல்லாளின் அவசியத்தைக் குறித்திருக்கிறது. லக்ஷ்மியையும் சரஸ்வதியையும் தனத்திற்கும், கலைக்கும் அதிபதிகளாக எண்ணி யிருக்கிறது.. ......சாதாரணமாகவே தாயைத் தகப்பனுக்கு சமமாகவும், பெண்ணைப் பிள்ளைக்கு சமமாகவும், தமக்கையைத் தமையனுக்கு சமமாகவும் கருதப்படுகிறது. மனைவியை விட புருஷன் உயர்ந்தவன் என்பது எதன்பொருட்டென்றால் சாதாரணமாக நமது நாட்டில் மனைவியை விட புருஷன் வயது முதிர்ந்தவனாகவிருக்கிறான். அதுவுமன்றி குடும்பத்துக்கு அன்ன மளிக்கிறான். அதுவேயன்றி மற்றெவ் விதத்திலும் பெண்ணை ஆணுக்குக் கீழ்படிந்ததாக ஒருவரும் கருதவில்லை.

நாம் சுயராஜ்யத்திற்கு சண்டையிடுவது ஏனென்றால் இப்பொழுது அன்னிய ஆட்சிக் குட்பட்டிருப்பது போல் நாம் எப்பொழுதும் இருந்தது இல்லை. ஜாதி வித்தியாசம் ஒழிப்பதற்கு பிரயத்தனப் படுவதும் இதே போல, என்றும் அந்த வித்தியாசம் இருந்ததில்லை என்பதால் தான். ஆனால் ஆணும் பெண்ணும் ஆதி முதல் இன்று வரையில் ஒரே மாதிரி தான் இருக்கிறார்கள். இனியும் மாறும் என்று எண்ண இடமில்லை. ஆகையால் ஒருவர் மற்றவருடன் சண்டை யிடுவதில் பிரயோஜனம் இல்லை. "இந்தியா" என்னும் பக்ஷிக்கு ஆண், பெண் என்று இரண்டு இறக்கைகள் இருக்கின்றன. இரண்டும் அவசியமே. ஆனால் இரண்டும் ஒரே வேலையை செய்யாமல் தங்களுக் கென்று விதித்திருக்கும் வேலைகளைச் செய்வதே நலம். இரு வகுப்பாரும் தங்கள் அவசியத்தை முன்னிட்டு தகுந்த கல்வியைப் பெற்று, சண்டையில்லாமல் ஜீவிப்பதே அழகு. அதல்லாமல், 'சாஸ்திரங்கள் ஆண் மக்கள் செய்ததாகையால் அவர்கள் எப்படிக் கெட்டுப் போனாலும் குற்றமில்லை யென்றும் பெண்களுக்கு மாத்திரம் மிகவும் கடினமான விதிகள் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன' வென்று குறை கூறுவது பிசகு. ஆண் மக்களையும் துன்மார்க்க வழிகளில் பிரவேசிக்க விடாமல் பாது காத்துக் கொள்வதே பெண்கள் கடமை. அதை விடுத்து, தாங்களும் அவ் வழிகளிலேயே செல்ல ஆசைப்படுவது மூடத்தனமாகும்.

ஆணும் பெண்ணும் சமம் என்பதில் தடையில்லை. ஆனால் சில விஷயங்களில் ஒருவர் மற்றவருக்கு அடங்கி நடப்பதும், வேறு சில விஷயங்களில் அவர்களை அடக்கி நடத்துவதும் தான் முறை அவ்விதமே நடந்து வருகிறது. அப்படி நடக்காததற்குக் காரணம் நம் பெரியோர்களல்ல. தற்கால மாந்தரின் மடமையே தான்.

---

# விவசாயத்தின் மகிமை

(தென்னுப்பிரிகா-டர்பன். சரஸ்வதி சபைத் தலைவர்
திரு. ச. முனிசாமி பிள்ளை)

வேதநூல் முதலாகி விளங்குகின்ற கலையனைத்தும்
ஓதுவா ரெல்லாம் உழுவார்தந் தலைக்கடைக்கே!
கோதைவேன் மன்னவர்தம் குடைவளமும் கொழுவளமே!
ஆதலால் இவர் பெருமை யார்உரைக்க வல்லாரே?

உலகின்கண் தோன்றின நாகரீகமுள்ள தொழில்களில் விவசாயமே சிறந்தது. கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம் முதலிய யுகங்களிலேயே உழவுதொழில் செழித்தோங்கி உலக ஜீவவர்க்கத்திற்கு முழுமுதல் ஆதாரமாக இருந்தவதன்பதும, ராமாயணம், பாரதம், பாகவதம் முதலிய இதிகாச, காவிய, புராணங்களிலிருந்து ஏற்படுகிறது. உழவுத்தொழில் செவ்வனே அவ்வக்காலங்களிலும் நடைபெற்றதென்று நாட்டுச் சிறப்பைக் கூறும் அத்தியாயங்களி லெல்லாம் தெளிவுற எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

உலக மாதாவான திருமகளே ஜனக மகாராஜனின் தோட்டத்தில் உழுது கொண்டிருந்த கலப்பையின் கார் முகத்திலே தோன்றினள். இது உழவுத்தொழிலினுல் பெருநிதியு மடையலாமென்று உலகத்தாருக்கு வலியுறுத்தவே யன்றோ? பரசுராமருககு ஆயுதம் கலப்பை. மகாவிஷ்ணுவின் அவதாரததில் முக்கியமானதாகக் கருதபபடும் கிருஷ்ணன், உழுந் தொழிலுக்கு இன்றியமையாத மாடுகளை மேய்க்கும் குலததில் உதித்தமை உழுந் தொழிலை மறைவாக உலகத்தாருக்கு சிபார்சு செய்வதாகக் கொள்ளவேண்டியது நியாயமன்றோ? பரமசிவனது வாகனம் ரிஷபம். இவை எல்லாவற்றிலிருந்தும் உழுத்தொழில் கடவுள் சம்மதமானதும், சாஸ்திர சம்மதமானதுமான ஒரு முழுமுதற்றொழிலென ஏற்படவில்லையா?

தெய்வப்புலமை வாய்ந்த கம்பரும், கிருஷியை வெகுவாகப் போற்றியிருப்பதும், இப்புலவர் செய்துள்ள ஒவ்வொரு நூலிலிருந்தும் ஏற்படும். எந்த இடத்திலும் இவர் உழவுத்தொழிலைப் புகழாது விட்டதிலலை. ஒட்டக் கூத்தன் ஈட்டி எழுபது பாடியதற்குப் போட்டியாக உலகில் முழுமுதலாக விளங்கும் தொழிலைக் குறிப்பாகக் காட்டும் ஏரைப்பற்றி எழுபது செய்யுட்களியற்றி ஏர் எழுபது என நாமம் சூட்டினர்.

ஔவைக்கு உவந்த தொழில விவசாயமே. ஒரு அரசனுக்கு விவாக காலத்தில் வாழ்த்துக் கூறும்போது 'வரப்புயர' என்றுதான அவர் கூறிப் போந்தார். இதற்கு வியாகியானம்கேட்க "வரப்புயர நீர் உயரும்; "நீர் உயர நெல்உயரும்; நெல் உயரக் குடி உயரும்; குடி உயரக் கோன் உயரு"மென்று

அரசனே வியக்குமாறு பதிலளித்ததிலிருந்து விவசாயத்தின் மகிமை கட்டுக் கடங்காதது என்று நிரூபணம் செய்திருக்கிறார்.

திருவள்ளுவரும் தமது தமிழ்வேதமாகிய குறளிலே உழவுத் தொழிலைப் பற்றி வெகுவாய்ச் சிலாகித்துக் கூறி யிருப்பதும் புலனாகும்.

> "சுழன்றும் ஏர்ப்பின்ன துலக மதனால்
>
> உழந்தும் உழவே தலை."

என்றார் குறளாசிரியர்.

சிவப்பிரகாச சுவாமிகளும், உழவைச் செல்வனே நடத்துமாறு உலகத் தாருக்குச் சிபார்சு செய்யவேண்டியே பரமசிவன் பார்வதி இருவரும் பயிர்த் தொழிலைப்பற்றி ஒரு தர்க்கம் நடந்ததாக ஒரு செய்யளும் ஆக்கியுள்ளார். அது கீழ்வருமாறு:—

> அச்சுத னளிப்பனில முமது நேயன் வித்தை
>
> யருளுவன் பல பத்திரன்
>
> கலமுதவு வன்சமன் பகடீவ னந்தமக்
>
> கானதோ ரெருது முண்டே
>
> முச்சிர வயிற்படையி னைக்கொழுவ தாக்குவோ
>
> மொய்ம்புட னிழுத் திறுக்க
>
> முந்திய வடக்கயிற் றுடன்மற்று நமதன்பர்
>
> முன்போ யிரந்து கொள்வோம்
>
> இச்சையுடன் நமதிளைய தனையனு மியகந்த
>
> னினிமை யொடு மாடு மேய்ப்பன்
>
> இனியுழுது பயிரிடுத னன்றுநன் றிதைவிட்
>
> டிரந்துண்ப தீனமெனவே
>
> கச்சு முலைமாது உமை வுரைத்திடும் புத்தியைக்
>
> கைக் கொண்டுளத்தி லிது நற்
>
> காரிய மெனக்கருதி மெத்தக் களித்திடுங்
>
> கண்ணுத லுமைக் காக்கவே.





# சாங்கிய தரிசனம்

(திரு. எஸ். ஏ. திருமலைக் கொழுந்துப் பிள்ளை, பி.ஏ.)

## சாங்கிய சூத்திரம்

மாயையானவள் முக்குணமென்னும் மூன்று கலைகளால் (வஸ்திரத்தால்) பற்பல வேடம்பூண்டு புருடனை மருட்டி வரும் போழ்து, ஓர் அவதாரத்தில் உடைகளை மாற்றும் பொழுது, அவளுடைய உண்மையான நிர்வாணகோலம் புருஷனுக்கு அசதியிற் றென்படலும், மாயை "எவரேனும் அசதியில் எனது நிர்வாணத்தைக் கண்டுளரோ" என வெளி நாட்டங்கொள்ள உடனே புருஷன், பார்வையிற் காணப்படுகிறான். "ஓகோ! காரியம் கெட்டுவிட்டது; நமது யதார்த்த நிலையைப் புருஷன் உணர்ந்து கொண்டான்; இனிக் கேலியுஞ் செய்வன்" எனப் பயந்து மாயை மறைந்திருப்பள்.

மற்றும் ஓர் பெரிய உண்மையை உடைத்துக் காட்டுகின்றார்.

[புருஷனோ தனியன், செயல் இல்லாதவன், மூக்குணங்கட்கு அப்பாற்பட்டவன், அறிவே சொரூபன். இவ்வாறிருப்ப அவன் பந்தமுறுகின்றானென்றும், பந்தங்கழல்கின்றானென்றும், கூடுவிட்டுக் கூடு பாய்கின்றானென்றும், அலமருகின்றானென்றும் எவ்வாறு கூறக்கூடும்?]

## 62-வது காரிகை

தஸ்மான்ன பத்யதே நாபி முச்யதே நாபி ஸம்ஸரதி கஸ்ச்சித்—
ஸம்ஸரதி பத்யதே முச்யதேச நாநாஸ்ரயா பிரகிருதி:

சத்தியத்தை யுள்ளவாறு நோக்குமிடத்து, ஓர் புருஷனும் பந்தமுறுவானல்லன், விடுதலை பெறுவானுமல்லன், கூடுவிட்டு ஓடுவானுமல்லன். பின்னர் யாருக்கு இவை நேருகின்றதெனின், மாயைக்கே பல கூடுகள் உளதாதலின் அவளே பல கூடுவிட்டு ஓடுபவளும், அவளே பந்தமுறுபவளும், அவளே பந்தம் நெகிழ்பவளுமாவள்.

உரை. கூடுகள் என்றது தேவ, மனித, விலங்கு முதலானவைகளின் தேகங்களுக்கு வித்தா யிருப்பவற்றை.

ஆத்துமா பந்தமுறுவதா யெழும் பிராந்தி எத்தகையது? வாசஸ்பதி கூறுவது:—அரசனுடைய சேனை யுத்தபூமியில் வெற்றியையேனும் தோல்வியையேனும் அடையின் அவைகள் அரசன்மேல் ஏற்றிக் கூறப்படுவது

போலப் பிரகிருதிக்கும் நேருகின்ற இன்ப துன்பங்கள் புருஷன்மீது ஏற்றப் படுகின்றன.

திற்க. வெற்றி தோல்விகளா லுண்டாகும் இன்பதுன்பங்களை நேரே உண்மையில் அனுபவித்தது படையாட்களே யாயினும், அபிமான தோஷத்தால் அரசனும் இன்ப துன்பத்திற்கு ஆளாகின்றான். அவ்வாறே உள்ளவாறு சுக துக்கங்களை யனுபவிப்பது இலிங்கமேயாயினும், பாவனு தோஷத்தால் புருஷனே அனுபவிப்பதாய்த் தோன்றும். இத் தோற்றத்தைப் பொய்யாக விலக்கும் வழியுளதா? வெனின், உனது தேகத்தில் ஓர்வலி (தொந்தரவு விளையின், அது தேகத்தில் ஏதோ ஓரிடத்தில்தான் நிகழ்வதாகத் தோன்றும்' இவ்வலியை மனம் நோக்கியதால்தான் உளதென நம்பப்படுகின்றது. ஏனெனில் மனம் தேகத்தை மறந்திருக்கும் தூக்கக்காலத்திலும் ஏதேனுமோர் விஷயத்திச் ஆழ்ந்து பதிந்து கிடக்கும். தியான காலத்திலும் இலிங்கத்தில் (தேகத்தில்) நேரும் உபத்திரவம் தென்படாமலே நடைபெறுகின்றது. ஆதலின் நோக்கமற்றிருக்கின் துன்பந் தோன்றாது. அன்றியும் தான் உரிமை கொள்ளாத ஓர் சேதனப் பொருட்குத் தீங்கு நேரின், அத் தீங்கு பற்றில்லாக் காரணத்தால் சுத்த அறிவொன்றால் மட்டும் உளதென நம்பப்படுகின்றது; மனப்பற்றுள்ள சேதனப் பொருட்கண் நேரின் நெஞ்சமுந் துடித்துக் கொண்டிருக்கும். அறிவைக் கண்டவன் தனது தேகத்தில் நேரும் துன்பங்களைச் சாக்ஷி மாத்திரையாய் நின்று கண்டு துன்பத்தைத் துய்க்காது (அனுபவியாது) நிற்றல் கூடும்.

[பந்தமோக்ஷங்களை மாயை எவ்வாறு புருஷனுக்குத் தோற்றுவாய் செய்கின்றாளெனின்:—]

## 63-வது காரிகை

ரூபை: சப்தபிரேவ பத்ஞத்யாத் மான மாத்மனுபிரகிருதி:
ஸைவச புருஷார்த்தம் பிரதிவிமோசயத்யேகரூபேண.

மாயை எழுவித கோலங்களுள் (ரூபங்களுள்) தானுள் நின்று தன்னைத் தானே பந்தித்துக் காட்டுவள். (ஆதலின் பார்க்கப்படுவது அவனது கலைகளேயன்றி யவனல்லன்.)

பிரதி புருஷனது நன்மை கருதி ஓர்தாம் ஒவ்வொருவனுக்கும் தனித் தனி தனது கட்டுகளை யவிழ்த்து ஏகமான தனது நிர்வாண கோலத்தை (ரூபத்தை)த் தரிசிப்பிப்பள்.

உரை. எழுவித பாவங்களால் (கோலங்களால்) தன்னைப் பந்தித்துக் காட்டுவள். அவை:—

| | | |
|---|---|---|
| அறரூபம்.<br>மறரூபம்.<br>ஆசாரூபம்.<br>வைராக்கியரூபம்.<br>ஐசுவரிய ரூபம்.<br>அனைசுவரிய ரூபம்.<br>அஞ்ஞானரூபம். | } 7 | இவ் வெழுவகை ரூபங்களும் அவனது அற்றந்தைக் காட்டாது. கடைக்கண் ஞான ரூபிணியாய் நிற்கும் போழ்து அவனது அற்றம்? நிருவாணம் தெற்றென விளங்கும். |

எழு தாம் தன்னைப் போர்த்துக் காட்டுவள், ஓர் தாம் தன்னைத் திறந்து

காட்டுவள். எழுவிதமாய் மருட்டுவள், ஓர் விதத்தில் தெருட்டுவள். உலகங்களும் எழு, இசைகளும் எழு, நிறங்களும் (வர்ணங்களும்) எழு. நிறங்களையும், சப்தங்களையும் ஞானவழியாற் கண்டு நீக்கி, அடிப்படையைக் காணின் அஃது மாயாதரிசனமாம். இதுவே தர்மதேவதை; இதுவே பரமன் வாகனங் கொள்ளும் இடபம்.

இது பற்றியன்றே திரிலோகங்களாகிய முப்புறத்தை செற்றிக் கட்டையாற் பரமன் சாம்பராக்கி நின்ற போழ்து மாயையாகிய விண்டும் (விட்டுணுவும்) தன்ம தேவதா ரூபமான இடபமாகச் சென்று நின்று பரமனைத் தன் மீது ஆரோகணிக்கும்படி வேண்டிக் கொண்டனன். இவ் வதிரகசியத்தை (உட்கிடையை)ப் பின் வரும் திருவாசகத்தாற் றெளிக:—

திருச்சாழல்.

"தடகரியும், பரிமாவும், தேரும், உகந்தேறாதே
இடபம் உகந்தேறியவா றெமக்கரிய வியம்பேடீ
தடமதில்கள் அவைமூன்றும் தழலெரித்த வந்நாளில்
இடபமதாய்த் தாங்கினான் திருமால் காண் சாழலோ"

கபில சூத்திரம்:—"பிரகிருதி தன்னைத் தானே பந்தித்துக் கொள்வது உலண்டு (பட்டுப்பூச்சி) தான் கட்டிய கூட்டினுள் தான் அகடபட்டுக் கொள்வது போலும்"

மாந்தர் மாயையுள் மாட்டிக் கொண்டு வெளிவரத் தெரியாது சனன மரணச் சுழற்கண் அலமரும் விந்தையைத் தெய்வப் புலமைக் கல்லாடர் பின் வருமாறு விளங்கினர்:—

"வரியுடல்சூழக் குடம்பை னூறெற்றிப் போக்குவழிபடையா
[துள்ளுயிர் விடுத்தலின்
அறிவுபுறம்போய வுலண்டதுபோலக் கடற்றிரை சிறுக
[மலக்குத்துயர் காட்டும்
உடலெனும் வாயிற் சிறைநடுவுபுக்குப் போகாதணங்குறும்
[வெள்ளறிவேமும்
ஆரணம் போற்றும் நின் காலுற வணங்குதும்."

[இவ்வாறு மாயை பந்தங்களை யெல்லாம் உதறிவிட்டு நிர்வாணமாய்த் தனது உண்மை (யதார்த்த) யுருவத்தைக் காட்டிய போழ்து, புருஷனுக்கு யாது நிகழ்கின்றதெனின்?]

## 64-வது காரிகை

யேவம் தத்வாப்யா சான்னாஸ்மி நமே நாஹ மித்யபரிஸேஷம்
அவிபர்ய யாஹி சுத்தம் கேவல முத்பத்யதே க்யானம்

இவ்வாறு தத்துவங்களை இடையறாது ஆராய்வதனால், அறிவையெஞ்சி நிற்பதானது ஒன்று மில்லையான முடிவையும், திரிவுணர்ச்சியை வெட்டியெறிந்த வெற்றியையும், தூய்மையையும், ஒப்பிலாத் தனிமையையும் (தானே யெல்லாமா யல்லதுமா யிருக்குந் தன்மையையும்) கண்ட பரஞான மூதயமாகும்.

அஃது எஃதெனின் ?:—

| நாஸ்மி | நமே | நாஹம் |
|---|---|---|
| நானுளனென்பதில்லை. | எனதென்பதில்லை. | நானென்பதில்லை. |

என்னும் ஞானமே.

உரை:—இவண் கூறிய ஞானம் வாக்கிறந்த பரிபூரணத்தின் மேற்று.

இதுவே ஞாதுரு, ஞானம், ஞேயங் கடந்த பரஞானம். எல்லாப் பொருண் முடிவுமிவ ணிருப்பினும் ஓராற்றாற் சிறிது விளக்குதும்.

ஞானநயனமாகிய மனம் வாக்கை வாகனமாகக் கொண்டு எப்போழ்தும் ஓர் பொருளை நாடி நிற்பதுண்டு. தேடிக் கொண்டிருக்கிறதே அப்பொருள் தான் எவண் உளதோவென போதம் நன்காராயப் புகுந்தபோழ்து அப் பொருள் போன வயனமுந் தெரியா தில்லையாயிற்று. இந்நிலைதான் "என தென்பதில்லை" என்றவிடம். ஞேயமற்ற விட முமாம். கண்கெட்ட விட மென்பது மிதுவே.

பின்னர், ஞேயத்தைத் தேடுங்கால் இயங்கிக்கொண்டிருந்த வாக்கு இயக்கமற்றதால் சப்த வுணர்ச்சியும் மறைந்தது. இந்நிலை நானுள னென்ப தில்லை என்றவிடம். இது செவிகெட்ட விடமுமாம்.

மனம் தேடி யோடிக் காணப்புகுந்த பொருளும் சூனியமாயிற்று; வாக் கின் இயக்கமாகிய சப்தமும் சூனியமாயிற்று.

இருக்கட்டும், சப்தம்தா னெழுந்ததே சப்தத்திற்கு உற்பத்தானமான "நான்" எனும் வாக்குத்தான் எவண் உளதென உண்ணோட்டங் கொண்ட போழ்து வித்தாகிய ஞாதுருவும் இல்லாது சூனியமாயிற்று. இதுவே "நான் என்பதில்லை" என்ற விடம். இதனையே "நான் கெட்டவா"வென மாணிக்க வாசக ருரைத்தனர்போலும். இதுவே பிறப் பிறப்பில்லாவிடம்; நினைப்பும் மறப்புமற்றவிடமும் இஃதே.

ஆகவே ஞேயத்தைக் காணவெழுந்த போழ்து ஞேயங் கெட்டொழி யவே தேடப்புகுந்த கண்ணும் தொழிலற்றுக் கெட்டது. காட்சியும் கண்ணு மொழியவே சப்தம் தென்பட்டு நானுளேனெனச் சொல்லிக்கொண்டிருந்தது. பின்னர் செவியறிவு அதனை யுற்று நோக்கவே சப்தமும் மறைந்தது. சப்த மயமான ஞானததைக் கிட்டி யறிய ஆரம்பித்த செவியும் பற்றுதற் கொன்று மின்மையின் அவிந்துபோயிற்று.

இருக்கட்டும், ஏதோ வித்திருந்தன்றே உளேன் உளேன் எனச் செப் பிற்று. அவ்வித்து எவண் உளதெனப் போதம் வலை சுருங்குவது போற் சுருங்கி மீன்போன்ற வாக்கு வித்தைப் பிடிக்க நேர்தலும் பிறவி பீஜமாகிய வாக்கும் இறந்தது. போதம் வாக்கிறந்து நிற்கவே ஓர் களைகண்ணு மில்லாத சூனியமே தோன்றிற்று.

> "முப்பாலும் பாழாய் முடிவிலொரு சூனியமாய்
> அப்பாலும் பாழென் றறி."

என்றான் பொய்யா வாக்கனும்.

பிரத்தியட்சத்தில் நின்ற வுலகம் மறைதல் ஞேயமற்ற விடம். இதுவே முதற்பாழ்

# விசித்திர விநோதம்



பெண்சாதி:— "நாதா! இந்த நீர் வீழ்ச்சி ஒன்றை நினைப்பூட்டுகிறது."

புருஷன்:—"எதை?"

பெண்ஜாதி:—"உம்மை மணம் புரியு முன் என் கண்களினின்று விழுந்த நீரை."

* * *

ராமனும், கிருஷ்ணனும் பேசி முடித்த பிறகு.

ராமன்:– (கிருஷ்ணனைப் பார்த்து) சரி, இபபோது நான் போகிறேன்.

கிருஷ்ணன்:— என்ன! இந்த வயதிலேயா போகிறாய்?

ராமன்:—நான் 20-வயது கிழவன்தான்!

* * *

உபாத்தியாயர்:— (ஒரு வகுப்பில் இலக்கணம் நடத்திக கொண்டிருககையில், பாலனைப் பாாதது) பாலா! பால் எத்தனை வகைப்படும்?

பாலன்:—மூன்று வகைப் படும் சார்!

உபா:-- (கோபத்துடன்) என்னென்ன?

பாலன்:— ஆட்டுப்பால், மாட்டுப்பால், எருமைப்பால்.

* * * *

உபாத்தியாயர்:—"பையன்களே! பாவம் செய்தவர்கள் நரகத்தையும் புண்ணியம செய்தவர்கள் மோக்ஷத்தையும் அடைவார்கள்"

பையன்களில் ஒருவன்:— (எழுந்து) "அதை எவ்வாறு சார் நீங்கள் கண்டு பிடித்தீர்கள்?"

குறும்பன்:—"டாக்டரே எனக்குக் கமிஷன் கொடுங்கள்."

டாக்டர்:—"எதற்காக?"

குறு:—"இப்போது ஒருவர் கால் ஒடிந்து உங்களிடம் வைத்தியம் செய்து கொள்ள வில்லையா?"

டாக்:—"ஆம்."

குறு:—"அவர் நடந்து சென்ற வழியில் நான்தான் வேண்டுமென்று வாழைப் பழத்தோலைப் போட்டு வைத்தேன்."

* * * *

எஜமான்:—"நீ இப்படி வேலை செய்து கொண்டு வந்தால், நான் மற்றோர் ஆள் பார்க்க வேண்டியதுதான்."

வேலைக்காரன்:—"ஆமாம். இந்த வீட்டில் இரண்டுபேர் செய்யக்கூடிய வேலை இருக்கிறது."

* * * *

தகப்பனுர்:—"அடே ராமா! வெற்றிலை, பாக்கு, சுண்ணும்பு கொண்டுவா" என்று சொன்னுர். ராமன் சற்று நேரத்திற்குள் வெற்றிலை, பாக்கு, சுண்ணும்புடன் திரும்பி வந்தான். அவர் தன்னுடைய கைக்கடியாரத்தில் மிஷினுக்கு பதிலாக சுண்ணும்பு இருப்பதைக்கண்டு அதிலுள்ள மிஷின்களை எங்கே என்று கேட்டார்.

ராமன்:—நேற்று கைக்கெடியாரத்தை ரிப்பேர் செய்துகொண்டு வரச் சொன்னதற்கு சுண்ணும்பு கரண்டகத்துக்குக்கூட உபயோகப் படாதென்று சொன்னீர்களே! அதற்காவது உபயோகப்படுமா என்று பார்த்தேன்.

* * * *

உபாத்தியாயர்:–டேய், நீ வெல்லிங்டனை (வைஸ்ராய்) பார்த்திருக்கிருயா?

பையன்:—பார்த்திருக்கிறேன் சார்.

உபா:—எங்கே? எப்பொழுது?

பையன்:—சென்ற கோடைக்கு நீலகிரிக்குப் போனேம். அங்கே ஒரு இடத்துக்கு வில்லிங்டன் என்று சொன்னுர்கள்.

* * * *

பிச்சைக்காரன்:—ஐயா மிகவும் பசியாயிருக்கிறது. ஏதாவது ஆகாரமிருந்தால் கொஞ்சம் கொடுங்கள்.

லோபி:—கடவுள் கடாக்ஷத்தினுல் நான் பணக்காரனுயிருந்தும் எனக்கு ஆகாரம் செல்வதேயில்லை.

* * * *

மூன்று வருடமாக கடன் கொடுத்து வட்டி வாங்காத ஒருவர் கடன் வாங்கினவரிடத்தில் சென்று, "ஐயா! என்னுடைய வட்டியைத் தரலாகாதா? இவ்வளவு நாள் போதாதா?"

கடன் வாங்கினவர்:— "என்ன ஓய்! நாளாய் விட்டது என்கிறீர். நேற்றுத் தானே உப்பு வாங்கி வந்தேன். அதை என் மகனிடத்தில் கொடுத்தனுப்பினேன். கொண்டு வரவில்லையா?"

# ஆசிரியர் குறிப்புக்கள்

## இந்தியாவின் மகத்தான பொறுப்பு

ஸ்ரீ ராமகிருஷ்ண பரம ஹம்சரின் நூற்றாண்டுவிழா சென்னையிலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தாரால் சென்ற 21-ந் தேதிமுதல் 27-ந் தேதி வரையில் சென்னையின் பற்பல பாகங்களிலும் மிகச் சிறப்பான முறையில் கொண்டாடப்பட்டது. பற்பல பெரியோர்களும் அறிஞர்களும் ஸ்ரீ பரம ஹம்சரின் செய்திகளைப் பற்றியும் உபதேசங்களையும் விவரித்துக் கூறினார்கள். முதல் நாள் கொண்டாட்டம் மைலாப்பூரில் நடந்தபோது அவ் விழாவில் ஜஸ்டிஸ் வெங்கட சுப்பராவ் தலைமையில் ஸ்ரீமான் ஐயகர் அரிய பிரசங்கம் செய்தார். அவர் கூறியதுபோல நமது பாரத தேசம் அரசியல் பொருளாதாரத் துறைகளில் பரிதாபகரமான நிலைமையை அடைந்திருந்தபோதிலும் உலகத்துக்கே பாரமார்த்திக அறிவைப் போதிக்கக்கூடிய சக்தியை மட்டும் இன்னமும் இழக்காம லிருக்கிறதென்பதற்கு ஸ்ரீ பரமஹம்சர் போன்றவர்களே அறிகுறிகளாவர். ஸ்ரீ ஐயகர் தமது பிரசங்கத்தின் இறுதியில் கூறியதுபோல் ஹிந்துக்கள் தற்கால நாகரிகத்தின் பயனாகவும், மேல்நாட்டுடன் ஏற்பட்டுள்ள கூட்டுறவின் பயனாகவும் வெளித் தோற்றங்களிலும், நடை உடை பாவனைகளிலும் மாறுதல் ஏற்றாலும் பாதகமில்லை. ஆனால் மனதில் மாறுதல் ஏற்படக்கூடாது. உண்மையாகவும் சத்தியமாகவும் நடந்துகொண்டு உயரிய லக்ஷியங்களுக்காகப் பாடுபட்டுப் பரிசுத்தமான ஹிந்துத் தன்மையை விடாமல் இருக்கவேண்டும்; இதுதான் ஸ்ரீபரமஹம்சரின் உபதேசமாகும். அவ் விழாவில் தலைமை வகித்த சர். வெங்கடசுப்பராவ் கூறியதேபோல உலகத்தில் சமாதானம், சமத்துவம் முதலியவற்றை நிலைநிறுத்த வேண்டிய பொறுப்பு இந்தியாவுக்கு இருக்கிறது. இந்தியா பரம்பரையாகவே தனக்கு ஏற்பட்ட சுபாவத்தால் இப் பொறுப்பை நிறைவேற்றுவதற்குரிய தகுதி பெற்றதாகவே இருக்கிறது. ஆகவே நாம் ஸ்ரீபரமஹம்சர் போன்றவர்கள் உபதேசங்களைக் கேட்டு நமது பாரமார்த்திக சக்தியை வளர்த்து அதை உலகத்தில் பரவச் செய்வதையே நமது தேசீயக் கடமையாகக் கொள்ள வேண்டும். இக் கடமையைச் செய்வதற்கு நமக்குச் சுதந்தரம் அவசியமாதலால் முதலில் அதைப் பெறுவதற்காக அனைவரும் பாடுபடுவோமாக!

---

## கவி ரவீந்திரர் உபதேசம்

கல்கத்தா சர்வகலாசாலை பட்டமளிப்பு விழாவின் போது இம் முறை கவிச்சக்கரவர்த்தி ரவீந்திர நாத தாகூர் வங்காள பாஷையிலேயே பட்டமளிப்பு விழாப் பிரசங்கம் செய்தது குறிப்பிடத்தக்க ஒரு மாறுதல் ஆகும். அவர் எவ்வளவோ வேலைகளை யுடையவராக இருந்தும் சர்வகலாசாலை தாய்ப் பாஷைக்குக் கௌரவத்தை அளித்ததால் தம்முடைய மற்ற வேலைகளை நிறுத்திக்கொண்டு அவர் பிரசங்கம் செய்யவந்தார். அவர் தமது பிரசங்கத்தில் ஆங்கில பாஷையின் சிறப்பைப் பற்றியும், அதனால் நமக்கு ஏற்பட்ட நன்மைகளைப் பற்றியும் புகழ்ந்துரைத்தது நியாயமே யாகும். ஆங்கிலத் தொடர்பு நமக்குப் புத்துயிரையும் உணர்ச்சியையும் அளித்த தென்பதில் சந்தேகமில்லை.

ஆனால் அதற்காகவே நாம் அப் பாஷைக்கு, அடிமையாகி விடக் கூடாதல்லவா! இப்போதும் ஒரு சிலர் அக் கல்விகற்ற அதிலுள்ள விஞ்ஞானம் முதலிய நூதன கலைகளையும் சாஸ்திரங்களையும நமது தாய்ப் பாஷையில் மொழிபெயர்த்துத் தாய்ப்பாஷையின் மூலம் அவ் வறிவு பாமர மக்களுக்குப் பரவும்படி செய்ய வேண்டும். அப்போது தான் நாம் முன்னேற்ற மடைய முடியும். தாய்ப்பாஷைக்குக் கௌரவம் கொடுக்க வேண்டிய அவசியத்தைக் கவி ரவீந்திரர் தமது பிரசங்கத்தில் நன்கு வற்புறுத்தியுள்ளார். தாய்ப்பாஷையில் கல்வி கற்றால்தான் படித்தவர்களுக்கும் படிக்காதவர்களுக்கு மிடையில் நெருங்கிய சம்பந்த மேற்பட்டு தேசீய அபிவிருத்தி ஏற்படும். ஆகவே அரசாங்கத்தார் தாய்ப்பாஷை அபிவிருத்தியில் கவனம் செலுத்துவார்களாக!

---

## பாசிஸ்ட் கொள்கையின் நாசத்தன்மை

இப்போது ஐரோப்பா உள்பட உலகத்திலுள்ள சுதந்தர தேசங்களில் மூன்று விதமான சர்க்கார்கள் நடைபெறுகின்றன. முதலாவது ஜனநாயக ஆட்சி முறை. இரண்டாவது ஜர்மனியிலும் இத்தாலியிலும் உள்ளது போன்ற பாசிஸ்ட் ஆட்சி முறை. மூன்றாவது ரஷ்யாவி லுள்ளது போன்ற சமதர்மம். இவற்றில் தெளிவான அபிப்பிராயமுடையவர்கள் ஜனநாயக ஆட்சி முறையையே ஆதரிக்கின்றனர். சமதர்ம ஆட்சிமுறை இன்னமும் பரீட்சார்த்த முறையாகவே இருப்பதால் அதைப் பற்றிய முடிவான அபிப்பிராயம் கூற முடியவில்லை. ஆனால் அனைவருமே பாசிஸ்ட் கொள்கையைக் கண்டிப்பதுடன் வெறுக்கவும் செய்கின்றனர். அம்முறைப்படி சர்வாதிகாரிகள் தங்கள் மனம்போனபடி மக்களை ஆட்டுகின்றனர். ஜனநாயக மென்பது சிறிதும் கிடையாது. பாசிஸ்ட் கொள்கையால்தான் உலக யுத்தமும் ஏற்படும்போலிருக்கிறது. ஆகவே காட்டுமிராண்டித்தனம் பரவாமல் நாகரிகத்தை பாதுகாக்க வேண்டுமாயின் பாசிஸ்ட் கொள்கையை முன்னேற வொட்டாமல் தடுக்க வேண்டுமென்று கவி ரவீந்திரநாதர் கூறுகிறார். அவர் ஸ்பெய்ன் நிலைமையைப பற்றி விடுத்துள்ள ஒரு அறிக்கையில், கலகக்காரர்களுக்கு பாசிஸ்ட் கொள்கையைப் பின்பற்றும் சர்வ தேசங்களும் சகாயம் செய்கின்றன என்றும், ஸ்பெயினில் உலக நாகரிகமே ஆபத்துக்குள்ளாகி இருக்கிற தென்றும், இப்படிப்பட்ட பாழ்படுத்தும் நாசத்தன்மையையுடைய பாசிஸத்தை ஒழிக்க வேண்டுமென்றும் கூறுகிறார். ஆயினும் இதற்கு என்ன வழி? வல்லரசுகள் ஒன்றையொன்று அவநம்பிக்கையும் சந்தேகமும்கொண்டு யுத்ததளவாடங்களைப் பெருக்கிக் கொள்வதில் சிரத்தை காட்டுகின்றனவேயொழிய இப்படிப்பட்ட நல விஷயங்களில் கவனம் செலுத்தவும் அவற்றிற்கு அவகாசமில்லாமலிருக்கிறது. முதலில் ஜனநாயக ஆட்சி முறையிலேனும் அனைவருக்கும் உண்மையான நம்பிக்கை ஏற்படவேண்டும். பிரிட்டிஷ் சர்க்காருககு அத்தகைய நம்பிக்கை உண்மையில் இருக்குமானால் முதலில் இந்தியாவில் சரியான ஜனநாயக ஆட்சிமுறையை அமலில் கொண்டுவர முயற்சிக்க வேண்டாமா? அதற்குரிய வேலைகளைப் பிரிட்டிஷ் சர்க்கார் செய்யுமென்று நம்புகிறோம்.

---

## மகாத்மாவின் கேள்விக்குச் சமாதானம்

உலகத்துக்கே ஆத்மசக்தியைப் போதிக்கக்கூடிய சக்தி வாய்ந்த இந்தியா பாரமார்த்திகத் துறையில் பிற்போக்கடைந்து அயர்ச்சியுற வேண்டிய காலத்தில் அவதரித்து அதைப் புனர் நிர்மாணம் செய்த உத்கிருஷ்டமான சன்னியாசியாகிய ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரது நூறுவதாண்டின் ஞாபகார்த்தமாகக் கல்கத்தாவில் சர்வமத பார்லிமெண்ட் கூடியது. அங்கு பற்பல அறிஞர்களும் கூடி மத விஷயங்களைப் பற்றி ஆராய்ச்சி செய்தனர். மேனாட்டு அறிஞர்கள் பலரும் விஜயம் செய்தது குறிப்பிடத்தக்கது. பார்லிமெண்டின் ஒவ்வொரு வேளைக் கூட்டத்திலும் ஒவ்வொரு பெரியார் தலைமை வகித்தனர். அம்மகாநாட்டுக்கு மகாத்மா காந்தி ஒரு கேள்வியை அனுப்பியிருந்தார். அதற்கு சர். பிரான்சிஸ் யங் ஹஸ்பெண்ட் என்னும் மேனாட்டு அறிஞர் பொருத்தமான பதிலை அளித்துள்ளார். அக்கேள்வியும் பதிலும் மக்களால் அவசியம் அறியவேண்டிய விஷயமாகும். மகாத்மா 'நாம் வைத்துக் கொண்டிருக்கும் எல்லா மதங்களும் சமமா? அல்லது ஒரே மதம்மட்டும் சத்தியம் என்னும் விஷயத்தைத் தன்னிடம் பூராவும் வைத்துக்கொண்டிருக்கிறதா? இதர மதங்கள் உண்மையற்றவையா?' என்று கேட்டிருந்தார். அதற்கு அந்த மேனாட்டு அறிஞர் அளித்த பதில் பின்வருமாறு:—'ஒவ்வொரு குழந்தையும் தன்னுடைய தாயார்தான் உலகத்திலேயே நல்லவளென்று நினைப்பதுபோல் நாமும் ஒவ்வொருவரும் நம்முடைய மதம்தான் எல்லாவற்றையும்விட மேலானதென்று நினைக்கிறோம். ஆனால் அதே சமயத்தில் எல்லா மதங்களுக்குள்ளும் ஒரு மூலாதாரமான ஒற்றுமை இருக்கிறதென்றே நாம் உணர்கிறோம். இந்த மூலாதாரமான ஒற்றுமையைதான் இந்தப் பார்லிமெண்டில் நாம் மெய்ப்பிக்க விரும்புகிறோம்' இந்தப் பதில் பொருத்தமானதல்லவா? ஆகவே எல்லா மதங்களும் சிற்சில உண்மைகளை அடிப்படையாகக் கொண்டனவேயாகும். அவரவர் மதம் அவரவர்களுக்குப் பெரியதுதான். இதனாலேயே ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சருக்கு மத மாற்றத்தில் நம்பிக்கை இருக்கவில்லை. அவரவரும் அந்தந்த மதத்திலேயே இருந்துகொண்டு நன்னிலைமையை அடையலாம் என்பதுதான் பொதுவான சித்தாந்தமாகும்.

---

## காலஞ்சென்ற பிரபல டாக்டர்

சென்னைத் திலகரான டாக்டர் சி. நடேச முதலியார் அவர்கள் பிரிவைக் கேட்டு திடுக்குறாத சென்னை மாகாணவாசி எவரும் இரார் என்பது நிச்சயம். அவரது குணாதிசயங்களைப் பற்றியும் சேவைகளைப் பற்றியும் விரிவாக எடுத்துக் கூறுவது மிகையாகும். அவர் ஜஸ்டிஸ் கட்சிப் பிரமுகர்களில் ஒருவராயினும் கட்சி பேதமோ இதர வித்தியாசங்களோ இல்லாமல் எல்லாரிடமும் அன்புடனும் பிரியமாகவும் பழகினர். எல்லாருக்கும் தம்மாலியன்ற உதவி புரிந்துள்ளார். ஏழைகளிடமும் தாழ்த்தப்பட்டவர்களிடமும் அவருக்கு அளவற்ற அனுதாபம். அவரது மரணம் பொதுவாக நமது மாகாணத்துக்கும் சிறப்பாகச சென்னை நகருக்கும் ஈடு செய்ய முடியாத பெருத்த கஷ்டமென்பதில் சந்தேகமில்லை. அப் பெரியாரது ஆன்மா சாந்தி யடைவதாக! அவரது குடும்பத்தார்க்கும் சகோதரர்களுக்கும் எமது அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

தொடர் கதை.

# மாயா விரோதி

(ஸி. எஸ். இராமன், எம். ஏ., எல். டி.)



## அதிகாரம்—1

### அஞ்சா நெஞ்சனின் வஞ்சக வலை

சென்னை துறைமுகத்திலிருந்தும் அந்தமான் தீவுகளை நோக்கிச் சென்றுகொண்டிருந்த 'ஜல தூதன்' எனும் கப்பல், தூர இருந்து பார்ப்பவர்கட்கு மன மகிழ்வைக் கொடுக்கத்தக்க வகையில், கம்பீரமாக அசைந்து, சென்றுகொண்டிருந்தது. அக்கப்பலின் மேல் எல்லாப் பக்கங்களிலும் காற்றினால் எழுந்த அலை சப்தம் செய்து, மோதிக்கொண்டிருந்தன. மேற்கு மலையை நாடிக்கொண்டிருந்த சூரியனுடைய பொற்கதிர்கள், கடல்நீர்மிசை வீழ்ந்து, பலவித வருணங்களை வாரி இறைத்துக்கொண்டிருக்க, காற்று சற்று முரட்டுத்தனமாகவே அடித்துக் கொண்டிருந்தது. கடல் பிராணிகளைச் சாப்பிட்டு வயிறு வளர்க்கும் பறவைகள் சில இரவு வருவதை யறிந்து, விசனித்து, பறந்து சென்றுகொண்டிருந்தன.

அத்தகைய சமயத்தில், கப்பலில் இருந்த ஜனங்கள் திடீரென்று புயல் வந்துவிடுமோ வென்று பயந்து, அது நேரிடாவண்ணம் ஆண்டவனைப் பிரார்த்தனை செய்துகொண்டிருந்தனர். ஆனால் கடல் வாசமே சதா நடத்தி வந்த சிலர் மட்டும் சிறிதும் அதைரியமுறாமல், தமக்குள் உத்தியோக அலுவல்களைப் பற்றியும் கப்பலில் இருந்த சிலரைப் பற்றியும் சம்பாஷணை நிகழ்த்திக் கொண்டிருந்தார்கள்.

கப்பலின் தலைவருடைய அறையில் தலைவரும் அவருக்கு அடுத்தபடியாக உத்தயோகம் வகிக்கும் உதவி கப்பல் தலைவரும் சிகரெட் குடித்துக் கொண்டும் தமாஷாய்ப் பேசிக்கொண்டும் இருந்தார்கள்.

"உங்களுக்கு இத்தடவை மன்னர் பெருமானுடைய பிறந்ததினக் கொண்டாட்ட விழாவில் 'ஸர்' பட்டம் கட்டாயமாகக் கிடைக்கும்" என்று உதவி கப்பல் தலைவர் சிந்தாமணி சொன்னார்.

'தாங்கள் எளிதாகச் சொல்லிவிட்டீர்கள் எனக்குப் பட்டம் கிடைக்குமென்று. ஆனால் அது என்னைக் கிட்டும் என்று நான் ஸ்வப்பனத்திலும் கருதவில்லை" என்று சிகரெட் புகை சுருள் சுருளாக மேல் போகுமாறு செய்துவிட்டுக் கூறினார் கப்பல் தலைவர் எல்லப்ப செட்டியார்.

"நீங்கள் ஸ்வப்பனம் என்று சொல்லுகையில் எனக்கு சிம்ம ஸ்வப்பனமாக இருக்கிறது. மாயா விரோதியை நினைத்தாலே போதும்; பயம் பொங்கு

கிறது; புயம் நடுங்குகிறது; மேனி துடிக்கிறது; ஆவி பதறுகிறது. அச்சண்டாளனை நாம் அந்தமான் தீவு கொண்டுபோய்ச் சேர்க்கும் வரையில் எனக்கு கவலைதான். வெளிக்குத்தான் சந்தோஷமாக இருப்பதாகக் காட்டிக்கொள்கிறேன்'' என மொழிந்தார் சிந்தாமணி.

அதைக் கேட்டு எல்லப்ப செட்டியார் கொல்லென்று பற்களைக் காண்பித்தவாறு நகைத்தார்.

"என்ன! நீங்கள் அவன் பொருட்டு பயப்படுவதா! அவனைத்தான் நாம் இக்கப்பலில் மிகவும் பத்திரமான அறையில் சிறை செய்து வைத்திருக்கிறோமே? அவன் கால்கட்டும் கைகட்டும் மிகவும் கெட்டியான இருப்புச் சங்கிலிகளைப் போட்டுக் கட்டி, அவன் ஓடிபபோகாதிருக்க இரண்டு போர் வீரர்களைக் காவல் வைத்திருக்கிறோம். அக்கைதியின் அறையின் வெளிப்புறத்திலும் காவல். அப்படியிருக்க அவன் ஓடிப்போவது எப்படி? தேவாதி தேவர்கள் வந்தாலும் அவனை ஓடிப் போகுமாறு செய்ய இயலாது'' என்று தைரிய மூட்டினார் கப்பல் தலைவர்.

உதவிக் கப்பல் தலைவர் சிந்தாமணி அவர் சொன்னதைப பொருட்படுத்தவில்லை. மாயா விரோதி எனும் கைதியைப் பற்றி அமோகமான அச்சத்தைக் கொண்டிருந்தார். அகுற்றவாளியின் துணிகரம், தைரியம், பெருந்தன்மை, கொடுமை, கொலை முதலானவற்றை தினசரிகள் மூலியமாகவும் ஜனங்கள் வாயிலாகவும் கேட்டிருந்தார். துப்பறியவர்களுக்கும போலீஸ் அதிகாரிகளுக்கும் சதாசார்வதா அல்லலைக் கொடுத்துவந்த மாயா விரோதி சென்னை ராஜதானியில் பல குற்றங்களைச் செய்ததாக ஜனங்கள் சொல்லுவர். அவனைப் பற்றி ஈண்டு உரைக்க வேண்டுவது கதைககு அத்யாவஸ்யமாக இருக்கிறது.

சென்னைக்கு அருகாமையில் உள்ள சைதாப்பேட்டையில் மாயா விரோதி என்று கொடிய பெயரால் அழைக்கபபட்ட முத்தைய்ய செட்டி பிறந்து வளர்ந்து, முதலில் நல்ல பையன் எனறு அக்கம் பககததோர் சொல்லுமாறு நடந்துவந்தான். அவனுடைய பெற்றோர்களுக்கு அவன் மூத்த புதல்வன்; குமாரி என்று ஒரு சகோதரியும் உண்டு. சிறு பையனாக இருக்கும் பொழுதே முத்தய்ய செட்டி கத்திக் கடை யொன்றில் வேலை பாரததுவந்தான். அவனுடைய எஜமானர் சின்னப்ப செட்டியார் பெரிய தனவந்தர். அவருக்கு இந்திரா என்று பெயர்வாய்ந்த ஆரணங்கு ஒருத்தியும் அவளைவிட ஈருண்டு வயது அதிகமான கண்ணப்பன் என்று பெயர் கொண்ட மகனும் உண்டு. சின்னப்ப செட்டியார் முததய்ய செட்டியின் வசீகரத் தோற்றத்திலும் சாமர்த்தியத்திலும் பெரிதும் மனம் மகிழ்ந்து, அவனை அடிக்கடி தமது மாளிகைக்கு வருமாறு சொல்லுவது வழக்கம.

அவருடைய அழைப்பு முத்தய்ய செட்டிக்கு எதிர்பாராத செல்வம் போலத் தோற்றியது. முத்தய்யன் செட்டியாருடைய புதல்வியின் எழிலில், தேனில் வீழ்ந்த ஈயைப்போல் அகபபட்டுத் தவித்துக்கொண்டிருந்தானாதலின், அக் குபேர சம்பத்தை மனதோடு மறைமுகமாய்க் காதலிக்க தருணம் ஏற்பட்டதறகு மிகவும சந்தோஷ முகமகமலர்ச்சியடைந்து அடிக்கடி செட்டியாருடைய மாளிகைக்குப் போய் வந்தான். அவனுடைய வருகை இந்திராவுக்கு அமோகமான அன்புச் செல்வத்தைக் கொடுத்துவந்தது. இருவரும்

தத்தம் காதலை வெளியிட முடியாது தியங்கித் தவித்தார்கள். ஏன்? இந்திரா பெரிய குடும்பத்தில் பிறந்தவள்; நாகரீக நங்கையாக வளர்ந்துகொண்டிருந்தாள். முத்தய்ய செட்டி ஏழை; பெரிய குடும்பத்தில் பிறந்தவன் அன்று. ஆதலின் இருவரும் ஒருவர் காதலை மற்றொருவர் அதிகமாக அறியாதவாறு சிறந்த, தெய்வீகத்தன்மை பெற்ற காதலைக்கொண்டு தத்தம் காரியங்களைக் கவனித்து வந்தனர்.

முத்தய்ய செட்டிக்கு பதினெட்டு வயது நடந்துகொண்டிருந்தது. இந்திரா அவனுக்கு ஓராண்டு சிறியவள்.

ஒருநாள் செட்டியாருடைய மாளிகைக்கு கணபப்பன் ஒரு நவீன யௌவன புருஷனைக் கொணர்ந்து, தனது பெற்றோர்களுக்கு அவனை அறிமுகம் செய்துவைத்தான். அவன் சென்னையில் பிரபல மனிதரான செங்கோட்டை ஜெமீந்தார் கிருஷ்ணப்ப செட்டியாருக்கும் மீனாட்சி அம்மாளுக்கும் பிறந்த தவப்புதல்வன் இராஜமன்னார். மிக்க அழகு வாய்ந்தவன். அவன் வெளித்தோற்றத்தில் பார்ப்பதற்கு முத்தய்ய செட்டியின் சாயலைக் கொண்டிருந்தான். ஆனால் இருவருடைய மூக்குகளில் மட்டும் வித்தியாசம் காணப்பட்டது. இராஜமன்னாரின் மூக்கு சிறிது நீண்டு, கம்பீரத் தோற்றத்தைக் கொடுப்பதாக இருந்தது. முத்தய்ய செட்டியின் நாசி சிறிது நீண்டு கொஞ்சம் வளைந்து இருந்தது.

இராஜமன்னாரின் பெற்றோர்கள் இந்திரா தங்களுடைய மருமகளாக வேண்டுமென்று எண்ணங்கொண்டு, சின்னப்ப செட்டியாரையும் அவருடைய மனைவி பார்வதி அம்மாளையும் கேட்டனர். தங்களுடைய வனிதா ஜோதியான இந்திராவுக்கு அத்தகைய மணாளன் கிடைப்பது கஷ்டமான காரியம் என்று கருதிய சின்னப்ப செட்டியாரும் பார்வதி அம்மாளும் ஜெமீந்தாருடைய வேண்டுகோளுக்கு இணங்கினர் ஆனால் இந்திரா தனக்கு பின்பு ஜெமீந்தாரினிப் பட்டம் வருவதைப் பற்றிச் சிறிதும் பெருமையாகக் கொள்ளாமல் விவாகம் செய்துகொள்ளப் பிரியமில்லையென்றும் படிப்பில் கவனம் செலுத்தப்போவதாகவும் சொன்னாள். அவளுடைய முடிவைச் செவியுற்ற பெற்றோர்கள் ஆச்சரியமடைந்து, எப்படி அந்நாரீமணியின் மனதைக் கலைப்பது என்று சந்தேகங் கொண்டனர்.

முத்தய்ய செட்டிக்கு எங்கு தனது காதல் பொக்கிஷம் ஜெமீந்தாருடைய புதல்வனைக் கலியாணம் செய்துகொண்டுவிடுகிறாளோ என்ற ஐயம் எழுந்து, அல்லும் பகலும் வாட்டி வதைத்துக்கொண்டிருந்தது. என்ன செய்வான்? காதல் அத்தகைத்து. இந்திரா இராஜமன்னாரைக் கலியாணம் செய்துகொள்ளச் சிறிதும் மனம் விழையவில்லையென்பதை பிறர் மூலமாகக் கேட்டதே அவன் அடைந்த சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை.

சின்னாட்குப் பின் ஒரு நாள் சாயுங்காலம் முத்தய்ய செட்டி இந்திராவின் மாளிகைக்கு அலுவலாகப் போனான். அங்கு செட்டியாருடைய அறையில் இராஜமன்னாரும் அவனுடைய நண்பன் ஒருவனும் சுவாரஸ்யமாகப் பேசிக்கொண்டிருந்ததைக் கண்ணுற்றான் அப்புதிய நண்பன் சென்னை கவர்னர் நிர்வாக சபையில் உள்நாட்டு மந்திரி சிதம்பர முதலியாருடைய குமாரன் மோகனரங்கன் என்பதை எளிதில் அறிந்து கொண்டான். பதினெட்டு ஆண்டுகளைக் கடத்தியவன்; சட்ட கல்லூரியில் பி. எல். பரீட்சைக்குப் படித்

துக்கொண்டிருந்தான்; நாகரீக நடையில் நவீனம் பொருந்திய உடைகளை அணிபவன் என்று எல்லோராலும் போற்றப்பட்டவன் என்பதை முத்தய்ய செட்டி அறிந்து கொண்டான். ஏதோ அவர்கள் பேசுவதாக நினைத்துக் கொண்ட முத்தய்ய செட்டி முதலில் சிறிது யோசனை செய்தாலும், அதைத் தள்ளிவிட்டுத் தன் காரியத்தை முடித்துவிட்டு வெளியே சென்றுவிட்டான்.

அன்றிரவு சின்னப்ப செட்டியாருடைய ஆள் ஒருவன் முத்தய்ய செட்டியின் வீட்டையடைந்து, "குமாரி அம்மாளை இந்திராதேவி யவர்கள் நாளை இரவு தம்மோடு இருக்குமாறு அழைக்கிறார்கள்" என்று சொன்னான்.

"அம்மாளிடம் அனுப்புவதாகச் சொல்" என்று முத்தய்ய செட்டியின் தாயார் வேதநாயகியம்மாள் சொன்னார்.

அதைக் கேட்டபின் அங்கு வந்த சேவகன் மரியாதை செய்து போய் விட்டான். வேதநாயகி யம்மாளும் குமாரியும் அதைப் பற்றிச் சந்தோஷமாய்ப் பேசிக்கொண்டிருக்கையில் வேதநாயகியம்மாளின் பர்த்தா கோபால செட்டியார் அங்கே வந்தார். முத்தய்ய செட்டியும் வந்தான். இந்திராவின் அழைப்பைப் பற்றிச் செட்டியாரின் புதல்வி பேசினாள். கோபால செட்டியார் மிகவும் மனம்பூரித்தார்.

"போய்வா, குமாரி. இந்திரா நல்ல பெண்" என்றார்.

மறுநாள் சாயுங்காலம் குமாரி சின்னப்ப செட்டியாருடைய மாளிகையினுள் இருந்த பெரிய சிருங்காரத் தோட்டத்தைக் கடந்து வீட்டினுள் சென்றாள். அப்பொழுது விளக்கு வைக்கும் நேரம். சிறிது இருட்டாகவேயிருந்தது. குமாரியைத் தொடர்ந்து, அவள் அறியாதவாறு சிறிது தூரத்தில், இந்திராவின் முகதரிசனத்தை எப்படியாவது பெறவேண்டும் எனும் நோக்கத்தால் ஊக்கமபெற்ற முத்தய்ய செட்டி மெல்ல மாளிகையை யடைந்து, ஒருவரும் தன்னைப் பார்க்கலாகாது எனும் கருத்தோடு ஒரு மறைவிடத்தில் நின்று கொண்டான்.

சிறிது நேரம் ஆனதும் அவனுடைய சகோதரி மாளிகையினுள், "ஐயோ! ஐயோ! காப்பாற்ற ஒருவரும் இல்லையா எனக்கு?" என்று பெரிய சப்தம் போடுவதைக் கேட்டதும், முத்தய்ய செட்டி கலவரமும் திகிலும் ஆச்சரியமும் கொண்டவனாய், மாளிகை நோக்கி சென்றான். வெளிக் கதவு உட்புறம் தாளிடப்பட்டிருந்ததைக் கண்டு மற்றொருபுறம் சென்றான். அங்கும் உள்ளே போவதற்கு வழி இல்லை. திடீரென்று அப்பங்களாவின் மாடியைத் தொட்டுக்கொண்டிருந்த ஒரு மரக்கிளை அவனுடைய கண்ணுக்குப் புலப்பட்டது. உடனே அந்தக் கிளை வாயிலாக மாளிகையை அடைவது முடியும் எனத் தீர்மானித்தான். விருட்சத்தை நோக்கி ஓடினான்; ஏறினான்; கிளையை யடைந்தான். அதன் மூலியமாய் மாடியையடைந்தான். மாடியிலிருந்தும் படிக்கட்டுகளை நோக்கி ஓடினான்! கீழே சென்றான். என்ன ஆச்சரியம்! அவனுடைய சகோதரி குமாரி தலைவிரி கோலமாய்க் கண்ணீரும் கம்பலையுமாய், சோர்ந்து, சோபா வொன்றின்மிசை சாய்ந்து உட்கார்ந்திருப்பதைக் கண்ணுற்றான். கொஞ்ச தூரத்தில் சின்னப்ப செட்டியார் நிற்பதைக் கண்டான். சூட்சும அறிவுபெற்றிருந்த முத்தய்ய செட்டி உண்மையை ஊகித்துக்கொண்டான். கோபத்தோடு பளீர் பளீரென்று நான்கைந்து அடி

களை அம்மாளிகையின் சொந்தக்காரருக்கு வழங்கினன். செட்டியார் அவற்றைப் பொருமல் மூர்ச்சையாகக் கீழே விழுந்துவிட்டார்.

குமாரி இடையில் விஷயத்தை தனது அண்ணனிடம் கூறினள். "நான் இங்கு வந்தேன். இச்சண்டாளன் தனது மனைவியும் இந்திராவும் சேவகர்களும் செங்கல்பட்டுக்குப் போயிருக்கும் சமயத்தில், இந்திரா என்னைக் கூப்பிட்டதாகப் பொய் சொல்லி அழைத்தனான். இங்கு வந்தால் இவன் மட்டும் உள்ளே இருந்ததைக் கண்டேன். இவன் கதவைத் தாளிட்டுத் தன் காதலைப் பற்றி உரைத்தான். நான் அப்பொழுதே உரக்கக் கூவினேன். அண்ணு, நீ மட்டும் இங்கு வந்திராவிடில் என் மானம் போயிருக்கும். நான் உடனே தற்கொலை செய்துகொண்டிருப்பேன். தெய்வம்தான் உன்னை இங்கே கொண்டுவந்துவிட்டது" என்று உரைத்தாள்.

அதைச் செவியுற்ற முத்தய்ய செட்டி முனிவடைந்து, "தங்கையே, அஞ்சாதே நல்ல வேளையாய் நான் வந்தேன். இச்சண்டாளன் உன்னைக் கெடுக்க சதிசெய்தானே! இவனிடம் இனிமேல் வேலை செய்வதில்லை" என்று மொழிந்துவிட்டு தனது தங்கையுடன் அங்கு நின்றும் அகன்ருன்.

சில தினங்களுக்குப் பின் முத்தய்ய செட்டி வேறு வேலையில் அமர்ந்துவிட்டான். சின்னப்ப செட்டியாரிடம் வேலையில் இல்லை. தனது சகோதரியைக் கெடுக்க நினைத்த மனிதனிடமா காசு பெறுவது? போலீஸ் அதிகாரியிடமும் செட்டியாரின் அக்கிரமமான செய்கையைப் பற்றி ரகசியமாய்ப் புகார் செய்திருந்தான். ஆனல் அவர் அதை லட்சியம் செய்யவில்லை.

இரண்டு மாதங்களுக்குப் பின் ஒருநாள் மாலை பைசைகிலில் முத்தய்ய செட்டி போய்க்கொண்டிருந்தான். ஹைகோர்ட் கடற்கரைப் பக்கம் போனன். சைகிலை சிறிது தூரத்தில் நிறுத்திவிட்டு, நீர் அருகே நடந்தான். ஆங்கு சின்னப்ப செட்டியாரும் மற்ெருருவரும் தனிமையில் சண்டைபோடுவதை அவன் கண்டான். ஆச்சரியம் அடைந்து, தனது பழைய விரோதத்தை மறந்து, செட்டியாரை மற்றவன் சமுத்திரத்தினுள் தள்ளிவிடாமல் பாதுகாக்க அவர் இருந்த இடத்திற்கு வேகமாக ஓடினன்.

(தொடரும்)

---

# “ ஆனந்தபோதினி ” பஞ்சாங்கம்.

தாதுஸு பங்குனிமீ —கலியுகாதி 5038, சாலிவாகனம் 1859,
பசலி 1346, கொல்லமாண்டு 1112, ஹிஜரி 1355-56,
இங்கிலீஷ் 1937ஸு மார்ச்சுமீ —ஏப்ரல்மீ

| பங்குனிமீ | மார்ச்சுமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | ஞா | துதி32-0 | ரே53-23 | அ53-23சி | [புண்யகாலம் சந்திரதெரிசனம்,ஷடசீதி |
| 2 | 15 | திங் | திரி24-33 | அஸ்47-48 | சித்60 | சுப முகூர்த்தம் செய்ய |
| 3 | 16 | செவ் | சது17-13 | பர42-43 | சித்60 | மாசசதுர்த்தி விரதம் |
| 4 | 17 | புதன் | பஞ்10-28 | ❋38-13 | அ38-13சி | கிருத்திகை, சஷ்டி,சரங்கம் |
| 5 | 18 | வியா | சஷ்3-48<br>சப்59-30 | ரோ34-35 | மர60 | அவமாகம் [வெட்ட |
| 6 | 19 | வெள் | அஷ்55-35 | மிரு31-58 | சித்60 | கரிநாள், வாசனமேற |
| 7 | 20 | சனி | நவ52-43 | திரு30-25 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 8 | 21 | ஞா | தச50-55 | புன29-55 | சித்60 | மேஷாயனம் நா-0-35 |
| 9 | 22 | திங் | ஏகா50-0 | பூச30-20 | சித்60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 10 | 23 | செவ் | து50-5 | ஆயி31-43 | சித்60 | நரசிம்ம துவாதசி |
| 11 | 24 | புதன் | திர51-13 | மக33-58 | சி33-58அ | பிரதோஷம், விவாகம் |
| 12 | 25 | வியா | சது53-10 | பூர37-10 | சி37-10மர | வியாதியஸ்தர் குளிக்க |
| 13 | 26 | வெள் | ○56-13 | உத்42-0 | சி42-0அமி | ○, பங்குனி உத்திரம், காம |
| 14 | 27 | சனி | பிர60 | அஸ்46-45 | மர60 | திருதினஸ்பிருக் [தகனம் |
| 15 | 28 | ஞா | பிர0-20 | சித்52-50 | சித்60 | |
| 16 | 29 | திங் | துதி5-33 | சுவா60 | அமி60 | |
| 17 | 30 | செவ் | திரி11-28 | சுவா0-3 | சித்0-3மர | |
| 18 | 31 | புத | சது17-55 | விசா7-40 | சித்60 | |
| 19 | 1937ஸு ஏப்ரல்மீ 1 | வியா | பஞ்24-35 | அனு15-28 | சி15-28பி | |
| 20 | 2 | வெள் | சஷ்30-48 | கே23-0 | ம23-0அமி | |
| 21 | 3 | சனி | சப்35-53 | மூல29-38 | சித்60 | |
| 22 | 4 | ஞா | அஷ்39-33 | பூரா34-50 | சி34-50அ | |
| 23 | 5 | திங் | நவ41-15 | உத்38-13 | ம38-13அ | |
| 24 | 6 | செவ் | தச40-50 | திரு39-23 | சித்60 | |
| 25 | 7 | புத | ஏகா38-13 | அவி38-35 | பி38-35சி | சர்வ, மத்வ ஏகாதசி |
| 26 | 8 | வியா | து33-40 | சத35-50 | மர35-50சி | வருணி திரயோதசி [திரி |
| 27 | 9 | வெள் | திர27-20 | பூர31-23 | சித்60 | பிரதோஷம், மாசசிவராத் |
| 28 | 10 | சனி | ச●19-53 | உத்25-43 | சி25-43மர | சர்வத்திர அமாவாசை |
| 29 | 11 | ஞா | அமா11-35 | ரே19-5 | அ19-5சித் | சுத்திக்கணபதி விரதம் |
| 30 | 12 | திங் | பிர2-43<br>துதி53-45 | அஸ்12-20 | சித்60 | சந்திர தெரிசனம், சைத்ர சுத்தம், யுகாதிபண்டிகை |
| 1 | 13 | செவ் | திரி45-18 | பர5-25<br>கி❋59-10 | சித்60 | கிருத்திகை, விஷு புண்ய காலம், வருஷப் பிறப்பு |

| சூரி சனி | சுக் | கே | |
|---|---|---|---|
| புத | 6-மீன-புத<br>8-மகர-குரு<br>21-மேஷ-புத | | |
| குரு | செ ராகு | | |

**Printed & Published by N. Munisawmi Mudaliar,**
**At the " Ananda Bodhini " Press.**
**No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Madras.**